உ

சிவமயம்

# வருக்கக் குறள்

## (மூலமும் உரையும்)

ஆசிரியர்

தண்டபாணி சுவாமிகள்



திருவாரூர்-தி. நா. சபாபதி முதலியார்

மணிவிழா வெளியீடு

உ

சிவமயம்

# வருக்கக் குறள்

## (மூலமும் உரையும்)

ஆசிரியர்
மகான், வண்ணச்சரபம், திருப்புகழ்ச் சுவாமிகள்
முருகதாச சுவாமிகள் என வழங்கும்
ஸ்ரீமத் தண்டபாணி சுவாமிகள்

நூலைப் பரிசோதித்தவர்
ஸ்ரீ முருகதாசபிள்ளை அவர்கள்

திருவாரூர் தி. நா. சபாபதி முதலியார்
மணிவிழா வெளியீடாக
சென்னை தென்னிந்திய செங்குந்த
மகாஜன சங்கத்தினரால் வெளியிடப்பெற்றது.
28—4—1946

குருவே துணை

# முகவுரை

ஸ்ரீ தண்டபாணி சுவாமிகள் என்னும் இந் நூலாசிரியர் திருநெல்வேலிப் பரம்பரைச் சைவ வேளாண் மரபில் செந்திநாயகம் பிள்ளை என்பாரது புதல்வராகத் தோன்றிய பெரியார் ஆவர். தாய் தந்தையர் செய்த பெரும்புண்ணியப்பயனே யன்றித் தமிழ் நாடு செய்த தவப் பயனாகவும் இவர்கள் 1839-முதல் 1898 வரை விளங்கினர்.

இவர்க்கு வழங்கும் பெயர்கள் :—

முருகதாசசுவாமிகள், தண்டபாணி சுவாமிகள், திருப்புகழ்ச் சுவாமிகள், அபர அருணகிரி, மகான், வண்ணச் சரபம் முதலியன.

இவர் காலப்புலவர்கள் :—இவருடன் அளவளாவிய புலவர்களும் அன்பர்களும் எண்ணற்றவராவர். அவர்களுள், வடலூரார் என்னும் இராமலிங்க சுவாமிகள், மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை, யாழ்ப்பாணத்து நல்லூர் ஆறுமுக நாவலர், அட்டாவதானம் பூவை கலியாண சுந்தர யதீந்திரர், புரசை - அட்டாவதானம் - சபாபதி முதலியார், காஞ்சிபுரம் மகாவித்துவான் சபாபதி முதலியார், வல்லை - சண்முகசுந்தர முதலியார் (Indian school of Medicine), வண்ணக்களஞ்சியம் காஞ்சி நாக லிங்க முனிவர், பண்டிதை மனோன்மணியம்மாள் முதலிய பலராவர்.

இவரை ஆதரித்த வள்ளல்கள் :—தேவகோட்டை வீர-லெ. சிதம்பரம் செட்டியார், ஊற்றுமலை ஜமீன் துரை இருதயாலய மருதப்பத்தேவர், புதுவை

ஞானப்ட ஆசாரி, கொழும்பு குப்பான் செட்டி யார், அமரம்பேடு சுப்பராய செட்டியார், முதலி யவர்களாவர்.

## வருக்கக் குறள் நூல் அமைப்பு

தமிழ் நெடுங்கணக்கிலுள்ள எழுத்துக்களை அகரவரிசைப்படுத்தி முறையே ஒலிக்கச் செய்யும் நூல்கள் வருக்க நூல்கள் ஆகும். அவை சூத்திரம் போலவும், வெண்பாவாகவும், கட்டளைக் கலித்துறை முதலிய பலயாப்புகளாகவும் செய்யப்பெறும், அவற்றுள், இந்நூல் "குறள்" வெண்பாவால் அமைந்தது. ஏனைய நூல்கள் மொழி முதல் நில்லா எழுத்துக்களை வாளா விடுத்தன. ஆனால், இந்நூல் அவ்வெழுத்துக்களையும் உயிருடன் இயக்கி எல்லா எழுத்துக்களையும் முறையே ஒலிக்கவும், முகப்பில் இயங்கவும் புரிந்துள்ள பெருமையுடையது. தமிழுலகம் இத்தகைய மாட்சியுடைய புதுநூலை இதுகாறும் பெற்றதில்லை. அழுக்காறில்லாத நோக்குடன் ஆராய்வார்க்கு இந்நூல் களிப்பும் வியப்பும் அளிக்கும் என்பது ஒருதலை.

## உரையாசிரியர்

இந்நூலுக்குப் பதவுரை, கருத்துரை, விளக்கவுரை ஆகிய முறையில் உரை ஆக்கிய பெருமை சோழவந்தான் கந்தசாமி சுவாமி கட்குரியது. அவர், ஷை ஊரில் அருளானந்த சுவாமிகள் ஆதினத்தில், கிண்ணிமடாலயத்தில் வதிந்தவர். முருகதாசருடன் பலதலயாத்திரை செய்தவர். இதுபோல் அடிகளாரின் நூல்கள் பலவற்றுக்கு உரையெழுதியவர்.

இவருடைய மாணவர்கள் :—ஊற்றுமலை ஜமீன் ஆதின வித்வான் கந்தசாமிப் புலவர், கழுகுமலை மகா வித்துவான் இராமகிருஷ்ண பிள்ளை, அரன்வாயல்

வெண்பாப்புலி வேங்கட சுப்புப்பிள்ளை, சந்தப் புலமை தங்கவேலுப் பிள்ளை, வித்துவான் சண்முக தாசபிள்ளை, சகோதரர் சித்திரபுத்திரப்பிள்ளை முத லியபலர் ஆவர்.

சிறப்பு மாணவர்கள் :—சிரவணபுரம் மகா சந்நி தானம் இராமானந்த சுவாமிகள், மகனாரும் மாண வரும் ஆகிய சந்தப்புலமைச் செந்திநாயக சுவாமிகள் ஆகிய இவர்கள், உபதேச அநுக்ரகம் பெற்று கௌ மாரசபைகளை நிறுவி, பல நூல்களையும் உலகுக் குத வியவராவார்கள்.

இவர் செய்தருளிய நூல்கள் :—பழநித்திரு வாயிரம், தில்லைத்திருவாயிரம், திருவரங்கத்திருவாயி ரம், மநு நெறித்திருநூல், சத்திய சூத்திரம், நான்கு நூல், அருளாட்சி, சகத்திரதீபம், ஏழாயிரப் பிரபந் தம், புலவர் புராணம், அறுவகை யிலக்கணம், ஏழாம் இலக்கணம், வண்ணத்தியல்பு என்னும் சந்த இலக்கணம், தமிழலங்காரம் முதலிய பலவாம்.

இத்தகைய ஆசிரியர் இயற்றிய வருக்கக்குறள் என்னும் இந்நூலை, திருவாரூர். திரு. தி. நா. சபா பதி முதலியார் அவர்கள் மணிவிழாவில் வெளிவருவ தற்கு முதற்காரணமாயிருந்த, வண்ணக்களஞ் சியம் காஞ்சி ஸ்ரீ நாகலிங்க முனிவர் அவர்கட்கும், சென்னை தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத் துக்கும், எனது மனமார்ந்த நன்றி யுரியதாகும்.

இங்ஙனம்.

தி. செ. முருகதாச பிள்ளை

விய ஞ
சித்திரை மீ 16௳
28—4—46

கௌமார மடாலயம்
திருவாமாத்தூர்
விழுப்புரம்

சிவமயம்

# பதிப்புரை

திருநெல்வேலியில் தோன்றித் துறவுக்கோலம் பூண்டு, திருவாமாத்தூரில் கௌமார மடாலயம் நிறுவிச் சுமார் 48 ஆண்டுகட்கு முன்னர், இறைவனுடன் கலந்த ஸ்ரீ தண்டபாணி சுவாமிகள் சிறந்த அறிஞர்; சண்மத சமயாதீத அத்துவித கௌமார விளக்கம் பொருந்தியவர்; "உலகில் பசுக்கொலை முதலிய உயிர்க்கொலை எதுவும் இல்லாமற் செய்வதற்கு ஏற்ற திருவருட்பேறு பெற்றாலன்றிச் சோறுண்ணேன் என்று இருபது ஆண்டுகள் நோன்புடன் இருந்தவர்; சுமார் இருநூற்றைம்பதுக்கு மேலான நூல்களை இயற்றியவர்; வண்ணப்பாக்களை இயற்றுவதில் வல்லவர் ஆகையால், வண்ணச் சரபம் என்ற சிறப்புப் பெயர் பெற்றவர்; இவர்களைத் திருப்புகழ்ச் சுவாமிகள் எனவும் முருகதாச சுவாமிகள் எனவும் கூறுவதுண்டு.

அப்பெரியாருடைய நூல்கள் பல இன்னும் வெளிவரவில்லை. அவை அனைத்தும் வெளிவருவதற்குத் தமிழுருமையும் அன்பு மிகுதியு முடைய தமிழ்ச் செல்வர்களின் ஆதரவு வேண்டிய திருக்கிறது. சுவாமிகளை ஞானசிரியராகக் கொண்ட அன்பரும், எங்கள் சங்கஸ்தாபகருமாகிய வண்ணக்களஞ்சியம் ஸ்ரீலஸ்ரீ காஞ்சி நாகலிங்க முனிவரின் தூண்டுதலின் பேரில், எங்கள் சங்கத்தலைவரும், செங்குந்த வள்ளலும், சென்னையில் பிரபல லுங்கிவியாபாரி களாகிய

மதராஸ் பளயகாட் கம்பெனி லிமிடெட்டின் மானேஜிங் டைரக்டரும் நிலச்சுவான் தாருமாகிய திருவாரூர் உயர்திருவாளர்—தி. நா. ச. சபாபதி முதலியார் அவர்கள், விய ஆண்டு, சித்திரைத் திங்கள், 16 ம் நாள் மணி விழாக் கொள்ளும் ஞாபகார்த்தமாகவும், நாங்கள் எங்கள் தலைவரிடம் வைத்துள்ள அன்பின் அறிகுறியாகவும், இந்நூலை முதன் முதலாக அச்சிட்டு வெளியிட்டுள்ளோம்.

தமிழ் எழுத்து வருக்கத்தில், திருக்குறளின் உயர்ந்த கருத்துக்களை, இந்நூல் குறள் நடையில் எடுத்துச் சொல்வதனால், வருக்கக்குறள் என்று நூலாசிரியர் இதற்குப் பொருத்தமான பெயர் அளித்திருக்கிறார்கள். நூலாசிரியரின் அன்புரிமைக்கு உரிய சோழவந்தான்—கின்னிமடம்—ஸ்ரீ கந்தசாமி சுவாமிகள் இந்நூலின் உரையாசிரியராக அமைந்தது போற்றத்தக்கது.

இந்நூலாசிரியரின் பௌத்திரர், திருவாளர் தி. செ. முருகதாச பிள்ளை அவர்கள், இந்நூலை வெளியிடுவதற்கு வேண்டிய உதவிகள் செய்ததற்கு எங்கள் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம். தமிழ் மக்களுக்கு வேண்டிய சிறந்த கருத்துக்கள் பலவற்றைக் கொண்டு விளங்கும் இந்நூலை வாசித்து, அவற்றைத் தங்கள் வாழ்க்கையில் பின்பற்றி இறைவன் அருளால் இகபர சுகங்களைப் பெறுவார்களாக!

செங்குந்தர் மாளிகை
33—அரண்மனைக்
காரன் தெரு
சென்னை 25—4—46

சி. நடராஜன் (வழக்கறிஞர்)
அமைச்சர், தென்னிந்திய
செங்குந்த மகாஜன சங்கம்

குருவே துணை

## நன்றியும் வேண்டுகோளும்

ஒரு தெய்வங் கொள்கை, தமிழின் அருமை, கற்பின் வலிமை, பெண்ணின் பெருமை, வாழ்க்கைத் துணை நலம், அருளுடைமை முதலிய நற்கருத்துக்களை வற்புறுத்துகின்ற "வருக்கக்குறள்" நூலானது, உயர்திரு - தமிழ்வள்ளல்—தி-நா-சபாபதி முதலியார் அவர்களுடைய மணிவிழா நாளில் வெளிவந்து, தமிழன்னையின் புதிய அணிகலனாக மிளிர்கின்றது! வள்ளலின் தமிழ்ப்பற்றும், தமிழ்த்தொண்டும் என்றும் ஓங்கி இளமையுடன் மிளிர்தல் கண்டு நன்றி செலுத்துவோமாக!

சந்தப்புலமை - செந்திநாயக சுவாமிகளின் அருமைப் புதல்வரும், பல நூல்களின் ஆசிரியருமாகிய தமிழ்ப் புலவர்—தி-செ-முருகதாசபிள்ளையவர்கள், முருகதாச சுவாமிகளின் மற்றைய எல்லா நூல்களையும் இது போன்று வெளியிட்டுதவுமாறு இறைவன் திருவருளை இறைஞ்சுகின்றேன். தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத்தினருக்கும் என் நன்றி உரித்தாகும்.

வருக்கக்குறள் நூலைப்படித்துப் பார்த்து இன்புறுகிற தமிழ்ப் பெரும்புலவர்களும், தமிழ் அறிஞரும் தங்களுடைய கருத்துக்களை எங்களுக்கு அனுப்பி வைக்கும்படி உரிமை அன்புடன் வேண்டிக் கொள்கிறோம்.

திருவாரூர் வள்ளலாரைப் போலவே மற்றுமுள்ள தமிழ்ச் செல்வர்களும் முருகதாசருடைய ஏனைய அருள் நூல்களையும் வெளியிட்டுதவுமாறு விண்ணப்பிக்கின்றோம். அருள்க முருகன்!

இங்ஙனம்:

(G. S. ஆறுமுகம் பிள்ளை என்னும்,
ஆசிரியர்—சாமி—ஆறுமுகனார்,
அமைச்சர்.

கோபால சமுத்திரம்
திருநெல்வேலி ஜில்லா
25—4—1946

முருகதாச தமிழ்ச் சங்கம்
(இணைக்கப் பெற்ற தமிழ்மன்றம்)
தென்னிந்திய முருகவேள் நூல் பதிப்புக்கழகம்

உ

குருவேதுணை

உரையாசிரியர்-சோழவந்தான் ஸ்ரீ கந்தசாமி
சுவாமிகள் இயற்றிய

# சிறப்புப்பாயிரம்

ஆசிரியப்பா.

நாலை நைதிய நன்னில மகள்வயின்
முரல்அளி மதுர்றை முகிழ்மலர்த் தேர்ந்தெனப்
பலபல கலையுட் பைந்தமிழ் தேரும்
பல்மை நசைஇய புண்ணியர் தமக்காச்
சான்றோர் அருளிய சாத்திரத் தமைத்தும்.
தோன்று தாழ்ந்துள தொகைசில விராஅய்
அறம்பொருள் இன்பம் அருமைசால் வீட்டின்
திறந்தெருள் ஊகமும், செவ்வேள் அருள்கொடு
சுருக்கமில் கேள்விச் சகுணர்கண் டுவப்ப
வருக்கக் குறள்நூல் வகுத்துக் கூறினன்.
அருட்குணம் என்னும்ஞா றங்குரம் அதனைப்
பருத்தமெய்த் தெய்வ பத்திநீர் பாய்ச்சிக்
குறுமுறி கொண்டு கொழுங்கனி பயப்பான்
மறுவரு தருதினம் வளர்க்குமாட் சிமையான்,
தெருட்கடல் பருகித் தெள்ளிய மெய்த்தவ
உருப்பெற் றவனியில் ஒழிவற வுலாவிப்
பேசரு மெய்ப்புகழ் பிறங்கிட மின்னி

## மதுரைத் தமிழ்ச்சங்கப் புலவர், வண்ணக்களஞ்சியங் காஞ்சி, நாகலிங்க முனிவர் அவர்கள்பாடியது

*தானனதான தத்தன தானன - தனதான*

*வேணுவனத் திற்குக வேளருள் - மிகையாலே*
*மேனிகொடுற் றுப்பல வாகிய - நெறியூடே*
*“காணுரு முற்றக்கொரு மோர்பம்” - எனமேலோர்*
*காமுற உட் பற்றறு பூதியி - லுணர்வோனே!*
*தோணிமிசைச் சொற்றமி ழாகிய - மொழியூடே*
தோயும்வருக் கக்குற ளாதிய - கடல்போலே
*மாணுலசத் திற் பகர்வீறுறு - தவமேலோன்*
*மாதைநகர்ப் பொற்றளி யூடவிர்-பெரியோனே!* (க)

### வெண்பா

*ஆரூர்ச் சபாபதிப்பேர் அண்ணலன்பர் உள்மகிழப்*
*பாரூடு தோன்றுமறு பாணண்டில்—சீரூரச்*
*செய்பணிவி யாத்திரத்திற் சேருநர்க்கச் சிட்டளித்த*
*மெய்ம்மைவருக் கக்குறட்பா மேல்.* (உ)

திருவாமாத்தூர் கௌமார மடாலயம் ஸ்ரீ தண்டபாணி
சுவாமிகள் பௌத்திரரும் ஸ்ரீ தி. மு. செந்திநாயக
சுவாமிகளது மகனாரும் மாணவரும் ஆகிய
தி. செ. முருகதாச பிள்ளை அவர்கள் இயற்றிய

## பதிப்புப் பாயிரம்

திருவளர்செந் தமிழ்த்தேயத் தொருபகுப்பாய்ச்
சோழமன்னர் செங்கோல் ஓச்சும்
பெருவளநாட் டணியாகித் தியாகேசப்
பெருமான்வாழ் பேறு வாய்ந்து
மருவளர்பூம் பொழில்குலவும் திருவாரூர்த்
தலத்திலகு மடப்பு ரத்தில்
தருவளர்ச கையிற்சிறந்து சபாபதிப்பேர்
வள்ளலெனத் தழைக்குந் தக்கோன். (௧)
வேலணிகைக் குகன்துணையாம் நவவீரர்
தம்மரபாம் மேன்மை மேவிச்
சீலமுறு செங்குந்தர் திலகமென
நாகப்பச் செம்மல் இந்த
ஞாலமிசைக் கமலாம்பா ளுடன் செயறத்
தால்மகவா நண்ணி அன்பு
சாலவுற்றோன் கலைமகளோ டலைமகள்கண்
அருட்பெருக்கஞ் சாரப் பெற்றோன் (௨)
கற்பணியும் பொற்பணியும் கொண்டுயர்இல்
லறமாண்பு கவின ஆற்றும்
பொற்பணியும் உலோகாம்பா ளம்மையுடன்
உலகியல்சீர் பொருந்த வாழ்கால்

நற்பணிபூண் டிடும்அரற்காம் நந்தனு
மூர்த்திஎன நண்ணுஞ் சேயை
வேற்பணியார் குகன்புனையங் கார்த்திகே
யப்பெயர்தோய் மேலோன் தன்னை (௬)

தனலட்சு மித்திருப்பேர் கௌரிநற்பேர்ப்
புதல்வியரை சகத்தோர் நாளும்
மனம்உவப்பப் பெற்றவன் சென் னையிற்குமிடிப்
பூண்டிகஞ்சி மதுரை வாரிப்
புனலிடைதோய் கொழும்புகண்டி எனமருவும்
பலபதியிற் புவியோர் போற்றத்
தனதனெனக் கனகமிகப் பெறச்செய் கலை
வாணிபத்தில் தலைமை தாங்கி (௭)

இலகுமத ராஸ்பளய காட்டுக்கம்
பெனியாமென் றிசையும் நாமம்
குலவுநடத் திடுசீலன் ஆரூரில்
ஐந்துகரக் கோமான் கோயில்
பலஅமைத்தோன் ஆரியன்கோ புரத்தினோடு
ஆயிரங்கால் பதியு மாறு
நிலவுமெழில் மண்டபத்தைப் பொலன்மிகையாற்
புதுக்கியறம் நிறுவி னனே (௮)

எத்தலமும் புகழஇவன் இப்புவியில்
அறுபானாண் டினிமை யாக
இத்தலத்தில் வாழ்ந்ததுபோல் இனியும்பல்
லாண்டுலகில் ஏற்ற வாழ்வு
மெத்தவுறச் செயுஞ்சாந்தி மணங்காண
வந்துவக்கும் மேலோர்க் கெல்லாம்
சித்தமகிழ் வுறத்தரும்அன் பளிப்பெனஓர்
நூல்வழங்கச் சிந்தித் தப்பால் (௯)

திருநெல்லைப் பதிவரும்எம் தண்டபா
ணிப்பெரியோன் செயும்பன் னூலுள்
உரும்தகா முதலாகத் தமிழ்மொழியிற்
குலவெழுத்தை வரிசை யாகத்
தருமொவ்வொரு குறட்பாவின் முதலில்உறு
மாறமைத்துச் சாற்றும் ஓர் நூல்
கருவமுறை யுடன்பொதுநூ லாய்ப்பலமாச்
புடனிலவும் வண்மை ஓர்ந்து

வியவாண்டு சித்திரையிற் பதினாற்
தேதிஇனை விரும்பும் வாரம்
நயமுறுபூ ரட்டாதி நண்ணியபுண்
ணியநாளில் ஞாலம் எல்லாம்
செய முடன்மக ளிசைத்து மகிழுவனர்
மணிவிழாத் தினத்தச் சிட்டுப்
புயல்மழைபெய் தாக்கெவர்க்குந் தரும்பெரியோன்
என்றுமின்பம் பொலிக மாதோ !

வாழ்க சபாபதிப்பேர் வள்ளல் மனைமக்கள்
வாழ்க அவன்றன் மரபினர்கள்—வாழ்க
கலைவாணி அன்னார் களிப்பஅவன் செய்யும்
கலைவாணி பந்தினம் வாழ்க !

தெய்வமே துணை

உ

குருவே துணை

# வருக்கக் குறள்

(மூலமும் உரையும்)



## கடவுள் துதி.

**என்றும் இறவான் இருபதம் போற்றிக்**
**குன்றுறு வருக்கக் குறள்பகர் வோமே.**

பதவுரை :—என்றும் - எக்காலத்தும், இறவான் - அழிவற்ற கடவுளுடைய, இருபதம் - இரண்டு (பெரிய) திருவடிகளையும், போற்றி - வணங்கி, குன்றுறு - குறைவுபடாத, வருக்கக் குறள் - வருக்கக்குறள் என்னும் நூலை, பகர்வோம் - யாம் சொல்லுவோம். (என்றவாறு)

க - து :—நித்தியசொரூபியாகிய முதற்கடவுளின் திருவடிகளை வணங்கி, வருக்கக்குறள் என்னும் நூலைச் சொல்லத் தொடங்கினோம் என்பதாம்.

நூல்

## உயிர் வருக்கம்

அருள்வழியிற் சோர்வடையா ஆர்வமுளார் எல்லாம்
இருள்வழியிற் செல்வார்க் கிகல்.

பதவுரை: - அருள்வழியில்-சீவகாருணியமாகிய நன்மார்க்கத்தில், சோர்வு அடையா-நடப்பதற்குத்தளராத, ஆர்வம் உளார் எல்லாம்-அன்புடையார் யாவரும், இருள்வழியில்-மற்றை ஆணவமல சம்பந்தமாகிய கொடிய மார்க்கத்தில், செல்வார்க்கு-நடப்பவர்களுக்கு, இகல்-பகைவராவார். (எ - று

க - து :—சீவகாருணியத்தில் பூரணநோக்க முடையவர் கள் ஏனையோர்களுக்குச் சத்துருக்களாவார்கள் என்பதாம். க

ஆறு சமயத் தவர்உரைக்கும் தெய்வமுற்றும்
வேறுவே றல்லவென்கை மெய்.

பதவுரை :—ஆறுசமயத்தவர் - அறுவகைச் சமயத்தோரும், உரைக்கும் - தனித்தனி அபிமானத்தாற் கூறும், தெய்வமுற்றும் - தெய்வங்கள் எல்லாம், வேறு வேறல்ல என்கை - வெவ்வேறன்று என்று மெய்யறிவுடையோர் கூறுதல், மெய் - உண்மையாகும். (எ - று.)

க - து :—ஒரு தெய்வமே பலதெய்வங்களாக விளங்குகின்றது என்பதாம். உ

**இச்சித்த பேறனைத்தும் ஈயும் திருவருளை**
**நச்சிக்கொள் வாரே நரர்.**

பதவுரை :—இச்சித்த - தொண்டர்களால் விரும்பப்பட்ட, பேறு அனைத்தும் - எல்லாப்பயன்களையும், ஈயும்-கொடுக்கவல்ல, திருஅருளை - இறைவன் கிருபையை, நச்சி - பேரன்புடன் வழிபட்டு, கொள்வாரே-வேண்டியவைகளைப் பெறத்தக்கவரே, நரர்-மானிட சரீரத்தைப் பெற்றவராவார். (எ - று.)

க - து :—இறைவன் கருணையைப் பெறுமவர்களே மேன் மக்களாவர் என்பதாம்.

**ஈகைத் தொழிலே இனிதென் றுணராதார்**
**ஓகைக் கிடையூ றுறும்.**

பதவுரை :— ஈகைத் தொழிலே-உத்தமர்களுக்குக் கொடுக்கும் கொடைத் தொழிலே, இனிதுஎன்று- இனிமையுடையதென்று, உணராதார்-அறிந்து கொடாதவர்களது, ஓகைக்கு மனக்களிப்புக்கு, இடையூறு - துன்பங்கள், உறும்-வரும். (எ - று.)

க - து :—உத்தமர்களுக்குக் கொடாதவருடைய மனமகிழ்ச்சி அழியும் என்பதாம்.

**உலகிற் குதவும் உணர்வுடையார் தாமே**
**இலகுண்மை ஞானத் தினர்.**

பதவுரை :—உலகிற்கு-உலகத்திற்கு; உதவும்-செய்யத்தகும் உபகாரங்களைச் செய்தற்கு

ஏதுவாகிய, உணர்வு - நல்லறிவை, உடையார் தாமே - உடையவர்களே, இலகு - பிரகாசிக்கின்ற, உண்மை ஞானத்தினர் - மெய்யறிவு உடையவர்கள். (எ - று.)

க - து :—உலகோபகாரிகளே மெய்ஞ்ஞானிகள் என்பதாம். ௯

**ஊனருந்தல் தீதென்(று) உறுத்தாதார் உற்றஉண்மை**
**ஞானமுற்றும் தேரில் நகை.**

பதவுரை :—ஊன்-புலாலை, அருந்தல்-புசித்தல், தீதுஎன்று-கொடியபாவம் என்று, உறுத்தாதார் - அனைவருக்கும் தெரிவியாதவர்கள், உற்ற - அடைந்த, உண்மை ஞானம்-மெய்ஞ்ஞானமானது, முற்றும் தேரில்-நன்கு ஆராயின், நகை-நிந்தையாய் முடியும். (எ - று)

க - து :—புலால் உண்ணுதலால் உண்டாகும் கொடுமையை உலகத்துக்கு நன்கு அறிவித்து நீக்கமாட்டாதவர்களுடைய ஞானம் பழியை உண்டாக்கும் என்பதாம். ௰

**எள்ளிடத்தில் எண்ணெயென எங்கும் நிறைந்தானை**
**நள்ளுநெறி ஒன்றே நலம்.**

பதவுரை — எள்ளிடத்தில்-எள்ளினிடத்து, எண்ணெய் என - தைலம் நிறைந்திருப்பது போல, எங்கும் - எவ்விடத்தும், நிறைந்தானை நிறைந்திருக்கும் மெய்க்கடவுளை, நள்ளும் உண்மை அன்போடு வழிபடும், நெறி - வழி

எதுவோ, ஒன்றே - அஃதொன்றுமே, நலம்-நன்மையதாகும். (எ - று.)

க - து :—எம்முடைய கடவுள் எங்குநிறைந்தவர் என்று கூறும் சமயமே நல்லசமயம் என்பதாம். எ

**ஏசினர்க்கும் பேறருள்வான் ஈசனெனத் தேறுமவர்**
**பேசிடுஞ்சொற் கில்லை பிழை.**

பதவுரை :—ஈசன் - எல்லாம் வல்ல இறைவன், ஏசினர்க்கும்-தன்னை உரிமையால் நிந்தித்தவர்களுக்கும், பேறு - நற்பயனை, அருள்வான் என-கொடுப்பான் என்று, தேறுமவர்-தெளிந்தவர்கள், பேசிடும்-சொல்லுகின்ற, சொற்கு-வார்த்தைக்கு, பிழையில்லை-குற்றமில்லை (எ - று)

க - து :—கடவுள், உரிமையினால் இகழ்ந்தோர்க்கும் அருள் செய்வார் என்று சொல்லுபவர் வார்த்தையில் பழுதில்லை என்பதாம். அ

**ஐந்து பொறியும் அடங்கும் குறியினின்றால்**
**வந்து திகழ்வான் வரன்.**

பதவுரை :—ஐந்து பொறியும்-பஞ்சேந்திரியங்களும், அடங்கும்-ஒடுங்குதற்கு ஏதுவாகிய, குறியில்-ஓர் இலட்சியத்தில், நின்றால்-ஒருவனது மனம் அசைவற நிற்குமாயின், வரன் - ஈசுவரன், வந்து-எளிதில் தோன்றி, திகழ்வான்-காட்சியளிப்பான். (எ - று.)

க - து :—ஐந்து இந்திரியங்களும் அடக்க, இறைவன் வடிவை இடைவிடாமல் தியானிப்பவர்களுக்கே கடவுட் காட்சி உண்டாகும் என்பதாம்.

ஒன்றன்றி மற்றும் ஒருதெய்வம் ஓதிடினும்
கன்றன்ன சிற்றறிஞர் காண்.

பதவுரை :—ஒன்றன்றி-தாம் வழிபடும் ஒரு தெய்வத்தையன்றி, மற்றும் - அதற்கு வேறாக வும், ஒரு தெய்வம் - வேறு ஒரு தெய்வம் உண் டென்று, ஓதிடினும்-சொன்னாராயினும் அவர், கன்று அன்ன - சிறுவரைப் போன்ற, சிற் றறிஞர்காண்-அற்ப அறிவினர் என்று அறிக. (எ - று.)

க - து :— தெய்வம் ஒன்று என்றிருப்பதே பேரறிவு என்பதாம்.

ஓங்காரத் துண்மை உணரார் உரைமுழுதும்
பாங்காமென் றெண்ணப் படா.

பதவுரை :—ஓங்காரத்து - பிரணவத்தின், உண்மை-உண்மைப்பொருளை, உணரார்-கேட் டுச் சிந்தித்துத் தெளியாதவருடைய, உரைமுழு தும்-உபதேசம்முழுமையும், பாங்குஆம் என்று- நன்மை பயப்பவை என்று, எண்ணப்படா- மதிக்கப்படமாட்டாது. (எ - று.)

க - து :—பிரணவத்தின் பொருளை நன்கு தெளியாத ஆசிரியருடைய உபதேசம் நன்மை தாராது.

ஔவையொடு வள்ளுவனும் ஆராய்ந் துரைத்தநெறி
செவ்வையெனத் தேர்ந்தோர் சிலர்,

பதவுரை :—ஔவையொடு வள்ளுவனும்- ஔவையாரும் திருவள்ளுவரும், ஆராய்ந்து - நன்மை தீமைகளை உணர்ந்து, உரைத்த நெறி-கூறிய நன்னெறிகளே, செவ்வை என- பெரும் பயன் அளிக்கும் என்று, தேர்ந்தோர்- தெளிந்துள்ள நல்லோர், சிலர் உலகத்தில் சிலரே ஆவர். (எ-று.)

கருத்து :—ஔவை, திருவள்ளுவர் கூறிய நல்லொழுக்கங்களைத் தழுவி நடப்பவர் உலகத்திற் சிலர் என்பதாம். கஉ

அஃறிணையே போலும் அவரே அகிலமிசை
வெஃகியுறை கின்றார் மிக.

பதவுரை:—அஃறிணையே - மிருகங்களையே, போலும் அவரே - ஒத்த-தன்மையை உடையவரே, அகிலமிசை- இவ்வுலகின் கண், வெஃகி- உண்ணல், உறங்கல்களையே விரும்பி, மிக- பெரும்பாலும், உறைகின்றார் - வாழ்கின்றார்கள். (எ - று.)

கருத்து :—மிருகங்களுக்கு ஒப்பான குணமுடையவர்களே உலகத்தில் அதிகரித்திருக்கிறார்கள் என்பதாம். கங

---

# மெய் வருக்கம்

**இக்கன்ன சொல்லார் இனத்தும் புருடரினும்**
**மிக்கவர்உண் டென்றுரைக்கை மெய்.**

ப - ரை :—இக்கு அன்ன-கரும்புபோன்ற இனிய, சொல்லார் - சொல்லையுடைய, இனத்தும்-பெண்கள் கூட்டத்துள்ளும், புருடரினும்-ஆடவரினும், மிக்கவர் - சிறந்தவர், உண்டென்று-சிலர் உண்டென்று, உரைக்கை-சொல்லுதல், மெய்-உண்மையாம். (எ - று.)

**கருத்து :**—ஆண்மக்களினும் சிறந்துள்ள சில பெண்மக்கள் இவ்வுலகின்கண் உளர் என்பதாம். கச

**இங்கும் பரன்உளன்என் றேத்துதலை விட்டுவிண்ணில்**
**தங்குநனே என்னார் தவர்.**

ப - ரை :—பரன்-மேலான கடவுள்எங்கும் உள்ளவனாதலால், இங்கும் - இப்பூலோகத்திலும், உளன் என்று-உள்ளவன்தான் என்று தெளிந்து, ஏத்துதலை - துதிக்கும் தொழிலை, விட்டு-நீக்கி, விண்ணில் - பரலோகத்தில் மாத்திரம், தங்குநன்-உள்ளவன், என்னார் - என்று சொல்லார், தவர் - மெய்த் தவமுடையோர். (எ-று.)

**கருத்து :**—கடவுள் எங்கும் நிறைந்தவன் எனத் தெளிந்துள்ளவர்களே உண்மைத் தவசிகள் என்பதாம். கரு

**இச்சை தவத்திற் கிகல்என்பார் ஏற்றமுறின்**
**மெச்சும் உறவாய் விடும்.**

ப - ரை :—இச்சை - ஆசையானது, தவத்திற்கு- ஹுக்கு, இகல் என்பார்-பகையாகும் என்று சிலர் கூறுவார். ஏற்றம் உறின்- அவ்வாசையானது அளவிறந்துள்ள தாயின், மெச்சும் - யாவரும் கொண்டாடத்தக்க, உறவாய் விடும்-அத்தவத்திற் துணையாய் முடியும். (எ - று.)

கருத்து:—நிராசையேயன்றிப் பேராசையும் தவத்திற்குத் துணையாகிப் பெருஞ்சுகத்தை விளைக்கும் என்பதாம். கசு

**இஞ்ஞானம் அஞ்ஞானம் என்றுரைப்பார் ஈசனருள்**
**எஞ்ஞானத் திற்கும் இறை.**

ப - ரை :— இஞானம் - இந்தஞானம் பெரிது, அஞானம் - அந்த ஞானம் பெரிது, என்று உரைப்பார் - என்று சிலர் கூறுவர், ஈசன் அருள் - ஈசுவர அநுக்கிரகத்தால் உண்டாகும் ஞானமே, எஞானத்திற்கும - எவ்வகைப்பட்ட ஞானங்கட்கும், இறை - முதன்மையான பதிஞானமாம். (எ - று.)

கருத்து :—பாச ஞானம், பசுஞானங்களைக் கடந்த பதிஞானமே மெஞ்ஞானம் என்பதாம். கஎ

**இட்ட படிவருமென் றேமாந்து நாட்கழிக்கப்**
**பட்டவர்க ளெல்லாம் பதர்.**

ப - ரை :—இட்டபடி - கருவில் அமைத்தபடியே, வரும் என்று - எல்லாப்பயன்களும் கிடைக்கும் என்று, ஏமாந்து - இறுமாப்படைந்து, நாள்-வாழ்நாட்களை, கழிக்கப்பட்டவர்கள் எல்லாம் - வீணாகப் போக்குவோர் யாவரும், பதர் - பயன்படாத பதருக்கு ஒப்பாவார். (எ - று.)

**கருத்து** :—தன் முயற்சியை வெறுத்து எல்லாப்பயனும் அமைத்தபடி வரும் என்று இறுமாப்படையும் அறிவிலிகள் பயனற்றவர்கள் என்பதாம். ௧௮

**இண்ணுருப்பிற் றேய்சுழிபோல் ஈசன்முதல் மூவரையும்**
**நண்ணவல்லார்க் கில்லை நவை.**

ப - ரை :—இண் உறுப்பில்-ணகர ஒற்றினிடத்து, தோய் - அமைந்துள்ள, சுழிபோல்-மூன்று சுழிகளைப்போல், ஈசன்முதல் - சிவன் முதலிய, மூவரையும் - மும்மூர்த்திகளையும், நண்ணவல்லார்க்கு - இறைவனிடத்து அமைந்துள்ள முக்குணங்கள் எனத்தெளிந்துகொள்ள வல்லாருக்கு. நவை-மயக்கம் என்னும் குற்றம், இல்லை - அழிந்துபோம். (எ - று.)

**கருத்து** :—ணகரத்தின் மூன்றுசுழிகளைப் போல் மெய்க் கடவுளின் முக்குணங்களே மும்மூர்த்திகள் எனத்தெளிய வல்லோருக்கு விபரீத ஞானம் கெடும் என்பதாம். ௧௯

**இத்தரையிற் பேறொன்றும் எய்தாது வீடுபெற்ற
முத்தரும்உண் டென்கை முரண்.**

**ப - ரை :**—*பேறு ஒன்றும் - அருட் பேற்றால் உண்டாகும் அற்புதங்களுள் ஒன்றும், எய்தாது - அடையாதிருந்து, வீடு பெற்ற - முத்தியடைந்த, முத்தரும்-முத்தான்மாக்களும், இத்தரையில் - இப்பூமியின்கண், உண்டு என்கை- உளர் என்று சிலர் கூறுதல், முரண் விரோதமாம். (எ - று.)*

**கருத்து :**—*அருட்சித்தி பெறுதவர்களை மெய்ஞானிகள் என்பதும், மோட்சம் அடைந்தவர்கள் என்பதும் குற்றமாகும் என்பதாம்.* உ0

**இந்நகரே நன்னகராம் என்னும்நூல் யாவுமெண்ணில்
எந்நகரும் நன்னகரா மே.**

**ப - ரை :**—*நூல் - தலப்பெருமை கூறும் ஓர் நூலானது, இந்நகரே-இந்தத் தலமே, நல் நகராம்-எல்லாப் பயன்களையும் தரவல்ல நல்ல தலம், என்னும் - என்று ஒன்றொன்றையே சிறப்பித்துக் கூறும், யாவும் - அவ்விதமே கூறும்எல்லாநூல் களையும், எண்ணில் - நன்கு ஆராயின், எந்நகரும்-எல்லாத்தலங்களும், நல் நகர் ஆம்-பயன்தரும் புண்ணியத் தலங்களே யாம். (எ - று.)*

**கருத்து ;**—*பூமியிலுள்ள புண்ணியத் தலங்கள் எல்லாம் பெரும்பயன் தரத்தக்கவைகளே. ஆகையால் ஐயம், திரிபு இன்றிப் பத்தியோடு வழிபடல் வேண்டும் என்பதாம்.* உக

**இப்பார் மகள்விருப்பம் ஈடிலருட் பேறடைந்தோர்**
**மெய்ப்பாதத் துண்டே மிக.**

ப - ரை —ஈடுஇல் - சமானம் இல்லாத, அருட்பேறு-திரு அருட் பேற்றை, அடைந்தோர்-பெற்ற மெய்ஞ்ஞானிகளுடைய, மெய்ப்பாதத்து-உண்மைத் திருவடிகளினிடத்து, இப்பார்மகள்-இந்தப் பூமி தேவிக்கு, மிக-பெரும்பாலும், விருப்பம் - அவாவானது, உண்டே-உண்டாகியே இருக்கும். (எ - று.)

கருத்து:—பூமிதேவி பெரியோர்களுடைய திருவடிகளைச் சுமப்பதிலேயே சதா விருப்பம் உடையவளாய் இருப்பாள் என்பதாம். உஉ

**இம்மையினில் உம்மை இயல்பறிய மாட்டாதார்க்(கு)**
**அம்மையற்ற வாறுபொய்மை யாம்.**

ப - ரை :—இம்மையினில் - இப்பிறப்பின்கண், உம்மை இயல்பு - முற்பிறப்பின் தன்மையை, அறிய - தெரிந்து கொள்ள, மாட்டாதார்க்கு-முடியாதவருக்கு, அம்மை-வருபிறப்பு, அற்றவாறு - நீங்கியதென்பது, பொய்மைஆம்-உண்மையல்லவாம். (எ - று.)

கருத்து :—முற்பிறப்பின் தன்மையைத் தெளியமாட்டாத வருக்கு வருபிறப்பு அறாது என்பதாம். உஙு

**இய்யரையா மாறே இரவும் பகலானுல்**
**வைய்முற்றும் போற்றல் வரும்.**

ப - ரை :—இ-இகர உயிரெழுத்தானது, அரை ஆம் மாறே - அரை என்னும் கணக்கெழுத்து ஆனதுபோலவே, இரவும் - இராக்காலமும், பகல் ஆனல்-பகற்காலமாய்ப் பிரகாசிக்கும்ஞானம்ஒருவருக்கு வருமாயின், வையம் முற்றும்-உலகமுழுவதும், போற்றல் - வணங்குமகிமையும், வரும் - அவருக்கு உண்டாகும். (எ - று.)

—இரவையும பகலாக்க வல்லதாகிய ஞானம அடைந்தவரை உலகமெல்லாம் வணங்கும் என்பதாம். உச

இர்எனல்முன் தவ்விடலூ டேய்ந்தமத்துப் போலு
கர்வமற்ருற் ருேன்றும் கதி. [ழக்கும்

ப - ரை :—இர் எனல்முன்-இர் என்பதன் முன், த இடல்-தகரக்குறிலேயும் கூட்டிக்கூறப்படும் பதார்த்தமாகிய தயிரின், ஊடு-மத்தியில், ஏய்ந்த-பொருந்திய, மத்துப்போல் - மத்தைப் போன்று,உழக்கும் - அறிவைக் கலக்குகின்ற, கர்வம் - அகங்காரமானது, அற்ருல் - கெடுமாயின், கதி-மோட்சத்தின் தன்மை, தோன்றும்-ஒருவனுக்கு விளங்கும். (எ - று)

கருத்து :—அகங்காரநாசம் உடையோர்க்கே முத்தி இன்பம் தோன்றும் என்பதாம். உரு

இல்லும் துறவும் இனிதே இலங் கருட்சீர்
ஒல்லும் தவமுடையோர்க் கு.

ப - ரை :—இலங்கு - விளக்கமான, அருட் சீர்-திருவருட் செல்வமானது, ஒல்லும்-பொருந் தத் தக்க, தவம் உடையோர்க்கு-தவம் வாய்ந் துள்ளோர்க்கு, இல்லும் - இல்லறமும், துறவும்- துறவறமும், இனிது நன்மையாகும். (எ - று.)

க - து :—ஒருவருக்குத் திருவருட் செல்வ மாத்திரம் வாய்ப்பதாயின் அவருக்கு இருவகை அறங்களும் ஒரு தன் மைத்தாகும் என்பதாம். உ௬

**இவ்வகிலம் நிற்குநிலை யீதென் றுணராதார்**
**செவ்வருட்பே றெய்தார் திறம்.**

ப - ரை :—இவ்வகிலம்-இந்த உலகம், நிற் கும் நிலை-நிற்கத் தகும் முறைமை, ஈது என்று- இன்னது என்று, உணராதார் - ஆராய்ந்து அறியாதவர், செவ் அருட்பேறு - செவ்விய அருட்பேற்றை, எய்தார்-அடையார் என்பது, திறம் - உறுதியாம். (எ - று.)

க - து :—உலக இலக்கணத்தை அறியாதவர்க்கு அருள் இலக்கணம் உள்ளபடி விளங்காது என்பதாம். உஎ

**இழுகாத நெஞ்சத் திருந்தவத்தோர்க் கெய்துமே**
**ஒல்காது வெல்லும் உரம்.**

ப - ரை :—இழுகாத - நிலைதவறாத, நெஞ் சத்து - திடசித்தம் உடைய, இரும் தவத் தோர்க்கு - பெருந்தவம் உடையோர்க்கு, ஒல் காது - தளராமல், வெல்லும் - பகைவர்களை

அடக்கும், உரம் - வலிமையானது, எய்தும்- உண்டாகும். (எ - று.)

க - து :—திடசித்தமுடைய மெய்த்தவம் உடையவர்க்கே சாப அநுக்கிரக சாமர்த்தியம் உண்டாகும் என்பதாம். உஅ

**இள்ளதற்கு முற்ககரம் இட்டதன்ன இன்சொல்லார்த் தள்ளலரி தாய தவம்.**

ப - ரை :—இள் அதற்கு - ளகர ஒற்றிற்கு, முன்-முன்னே, ககரம்-ககரக் குறிலையும், இட்டது அன்ன-கூட்டிக் கூறப்படும் கள்ளென்னும் தேனை ஒத்த, இன் சொல்லார்-இனித்த சொல்லையுடைய பெண்ணாசையை, தள்ளல் - நீக்கிச் செய்தலே, அரிதாய தவம்-அருமையாகிய தவமாம். (எ - று.)

க - து :—பெண்ணாசை இல்லாத்தவமே பெருந்தவம் எனபதாம், உக

**இற்ற வினையோர் இதயத்திற் றேன்றுமே மற்றையவர் காணு மலம்.**

ப - ரை :—இற்ற - மிகக் குறைந்த, வினையோர்-பூர்வ கர்மம் உடையவரது, இதயத்தில் உள்ளத்தில், மற்றையவர்-அக்கரும மிகுதியை உடையவரால், காணு - காணக்கூடாத, மலம்- மும்மலக் குற்றங்கள், தோன்றும் - விளங்கும். (எ - று.)

க - து :—இச்சையின்றிச் செய்த சிவபுண்ணியங்களால் மூன்வினை மிகவும் நசித்தவர்களுக்கு மும்மலத்தின் குற்றம் தோன்றும் என்பதாம் ௯0

**இன்னல் பணிவார்க் கிலாதொழிக்க மாட்டாதார்**
**என்னபயன் எய்தினும்வீ ணே**

ப - ரை :—பணிவார்க்கு-தம்மை முறைப்படி வழிபட்டவர்கட்கு, இன்னல் - துன்பமானது, இலாது-அற்பமும் இல்லாமல், ஒழிக்க மாட்டாதார்-நீக்க மனமில்லாதவர்கள், என்ன பயன் எய்தினும்-எவ்வகைச் சிறப்பு அடைந்திருப்பினும், வீணே - அது வீணேயாகும். (எ - று.)

க - து :—அடுத்தவர்களைக் காப்பாற்றாதவர்கள் பயனடையார் என்பதாம். ௯க

## உயிர்மெய் - ககரவருக்கம்

**கண்ணுடையார் தம்மிற் கடவுளுருக் காண்பரிதென்**
**எண்ணுநர்கண் ணில்லார்க ளே** (ரு)

ப - ரை :—கண்ணுடையார் தம்மில் - கண்களை உடையவர்களுக்குள், கடவுள்-ஈசுவரானது, உரு-சகளவடிவை, காண்பு-தெரிசித்தல், அரிது என்று - முடியாதென்று, எண்ணுநர்-நினைக்கின்றவர்கள், கண் இல்லார்களே-கண்கள் இல்லாதவர்களேயாவர். (எ - று.)

க - து :—இறைவனது திருவுருவத்தைத் தெரிசிக்க முடியாது என்பவர்கள் குருடர்களே யாவர் என்பதாம். கடு

**காராழி சூழுலகைக் காக்கின்ற காவலரிற்**
**சீராமன் போல்வார் சிலர்.**

ப - ரை :—கார் ஆழி-கரிய கடலால், சூழ்-சூழப்பட்ட, உலகை - உலகத்தை, காக்கின்ற-காவல் செய்கின்ற, காவலரில்-அரசர்களுக்குள், சீராமன் போல்வார்-சீராமனைப்போன்ற செங்கோல் அரசர்கள், சிலர் - சிலரே யாவர். (எ - று.)

க - து :—சீராமனையொத்த நீதி மன்னர் இப்பூமியிற் சிலரே யாவர் என்பதாம். கசு

**கிஞ்சுகவாய்க் கிள்ளைக் கிழவோன் மலர்க்கணைக்குள்**
**அஞ்சுகிலார் கண்ணனனை யார்.**

ப - ரை :—கிஞ்சுகவாய் - முருக்கம் பூவை யொத்த சிவந்த வாயையுடைய, கிள்ளை - கிளி வாகனத்திற்கு உரிய, கிழவோன் - மன்மதன் செலுத்துகிற, மலர்க்கணைக்கு-புட்ப பாணங்களுக்கு, உள் அஞ்சுகிலார் - மனோபயம் அடையார், கண்ணன் அனையார்-கிருட்டினனை ஒத்த திடஞானிகள். (எ-று)

க - து :—கிருட்டினனை ஒத்த திடஞானிகள் மன்மதனது போருக்கு அஞ்சார் என்பதாம்.

**கீழ்மக்க ளார்வம் கெடுமாறு செய்யாது**
**வாழ்மக்கள் ஞான மயல்.**

ப - ரை:—கீழ்மக்கள் - கீழோர்களுடைய, ஆர்வம்-மகிழ்ச்சியானது, கெடுமாறு - அழியும் படி, செய்யாது-அதற்கு ஏற்பவைகளைச் செய் யாமல், வாழ்மக்கள்-வாழ்கின்ற சீவன் முத்தர் களது, ஞானம் - ஞானமானது; மயல் - அஞ் ஞானமாகும். (எ - று.)

க - து :—மனம்போன வழியிற் செல்லும் துட்டர்களை அடக்கியாளாத சீவன்முத்தர்களது ஞானம் அஞ்ஞானமாம் என்பதாம். ௫௫

**குற்றஞ் செயினும் குணமாக்கிக் கொள்குரவற்**
**பற்றவல்லாற் கில்லை பயம்.**

ப - ரை :—குற்றம் - குற்றங்களை, செயி னும் - செய்தாலும், குணம் ஆக்கி - அவற் றைக்குணங்களாக்கி, கொள் - ஆட்கொள் ளும் பெருங் கருணையையுடைய, குரவன்-ஆசா ரியனை, பற்றவல்லாற்கு - பேரன்போடு வழி பட வல்ல மாணாக்கனுக்கு, பயம் - யாதொரு பயமும், இல்லை - உண்டாகாது. (எ - று.)

க - து :—அருள் வடிவமாகிய ஆசிரியனை அடுத்த சீட னுக்குப் பயம் இல்லை என்பதாம்.

**கூறுஞ் சுருதிக் குழாமுழுதும் கொள்ளுநலம்**
**பாரி**

ப - ரை :—கூறும் - பூர்வ பட்சமாகவும், சித்தாந்த மாகவும், எல்லாவற்றையும் விதிக்கின்ற, சுருதிக்குழாம்-வேத ஆகமங்கள், முழுதும் - எல்லாமும், கொள்ளும் - தம்முள் கொண்டிருக்கும், நலம்-நன்மையாகிய உண்மை நூற்களை, தேறும் அவர் - தெளிய வல்லவர், பாரில் இம் மண்ணுலகத்தில், சிலர் - சிலரேயாவார்.

(எ - று.)

க - து :—எல்லாவற்றையும் கூறும் வேதாகமங்களில் உள்ள பூர்வ பட்சங்களை நீக்கி, சித்தாந்தங்களையே கைப்பற்ற வல்லவர் இவ்வுலகத்தில் சிறந்தவர் என்பதாம். கஎ

**கெஞ்சி யிரப்போரிற் கீழோர் கடன்மிகக்கொண்(டு)**
**அஞ்சியொல்கும் பான்மை யவர்.**

ப - ரை :—கடன் மிகக் கொண்டு - வட்டியால் தொகை மிகும்படி கடனைக் கொண்டு, அஞ்சி - கடன் கொடுத்தவர்களைக் காணுந்தோறும், நினைக்கும் தோறும் பயமடைந்து, ஒல்கும் - மற்றவர்களைக் காணவும் அவரோடு பேசவும் வெட்கமடையும், பான்மையவர் - தன்மையை உடையோர், கெஞ்சி - பல்லைக்காட்டிக் கெஞ்சி, இரப்போரில் - யாசிப்போரைக் காட்டிலும், கீழோர் - தாழ்ந்தோராவார்.

(எ - று.)

:—கடன் கொண்டவர் யாசிப்போரினுங் கடையர் என்பதாம். கஅ

**கேள்விப் பெரும்பயனே கேடற்ற தென்றுணர்வார்**
**ஆள்வித்தைக் குண்டாம் அணி.**

ப - ரை :—கேள்வி - கேள்வியால் உண்டாகும், பெரும் பயனே - பெரும் பிரயோசனமே, கேடு அற்றது என்று - அழிவு இல்லாதது என்று, உணர்வார் - அறிய வல்லவரால், ஆள் - பயிலப் படும், வித்தைக்கு - கல்விக்கு, அணி - அழகு, உண்டாம் - உண்டாகும். (எ - று.)

க - து :—கேள்வியிற் பயன்றவர்கள் கல்வியே அழகுடையது என்பதாம். ௫௯

**கைக்குஞ் சரமனைய காவலர்தங் கோமானும்**
**மிக்குணர்ந்தோர்க் கஞ்சல் விதி.**

ப - ரை .—கை - துதிக்கையையுடைய, குஞ்சரம் - யானையை, அனைய - ஒத்த, காவலர் தம் - பலசிற்றரசர்களுடைய, கோமானும் - தலைவனாகிய பேரரசனும், மிக்கு உணர்ந்தோர்க்கு - அறிவில் முதிர்ந்தவர்களுக்கு, அஞ்சல் - அஞ்சி நடத்தல், விதி - நியமமாம். (எ - று.)

க - து :—அறிவில் மிகுந்த மேலோருக்கு அஞ்சி நடத்தல் அரசனுக்கு நல்லொழுக்கம் என்பதாம். ௬0

**கொல்லும் தொழிற்போல் கொடும்பாவ மில்லையெனச்**
**சொல்லும்சொல் பன்னூற் றுணிவு**

ப - ரை :—கொல்லும் - உயிரைக் கொலை செய்கின்ற, தொழில்போல் - தொழிலைப் போல, கொடும்பாவம் - கொடிய பாவத்தை விளைப்பது, இல்லை என - வேறொன்று இல்லை என, சொல்லும் சொல் - நல்லோர் கூறும் வார்த்தை, பன்னூல் - பல நூல்களிலும் உள்ள, துணிவு - நிச்சயமாம். (எ - று.)

க - து :—உயிர்க் கொலையே எல்லாப் பாவங்களினும் கொடியது என்பது பலநூல்களின் முடிபு என்பதாம். சுக

**கோவிற் கடவுள் குருபரனைக் காட்டுமென்றல்**
**பாவிற் பொறித்தார் பலர்.**

ப - ரை :—கோவிற் கடவுள் - ஆலயத்தின் கண் எழுந்தருளியிருக்கின்ற கடவுள், குருபரனை - மேலாகிய குரு மூர்த்தியை, காட்டும் - தன்னை வழிபட்ட தொண்டனுக்குத் தரிசிப்பிக்கும், என்றல் - என்பதை, பலர் - நல்லோர் பலரும், பாவில் - நூல் களில், பொறித்தார் - எழுதி அறிவித்தார்கள். (எ - று.)

க - து :—ஆலயத்தின்கண் உள்ள கடவுளை விதிப்படி வழிபடுகிறவருக்கு, சற்குரு தரிசனம் உண்டாகும் என்பதாம்.

**கௌவைக் கடல்சுவற்றும் காரணத்தை ஆய்ந்தறிவான்**
**மெய்வைத்த வாய்ப்பொருளே மேல்.**

ப - ரை :—கௌவை - துன்பம் என்னும், கடல் - சமுத்திரத்தை, சுவற்றும் - வற்றச்

செய்யும், காரணத்தை - ஏதுவாகிய உபா யத்தை, ஆய்ந்து - நன்கு ஆராய்ந்து, அறி வான் - உணர்ந்தவனது, மெய்வைத்த - சத்தி யம் நிறைந்த, வாய்ப்பொருளே - வாய்ச் சொல்லே, மேல் - உயர்ச்சி உடையதாம்.

(எ - று.)

க - து :—துயரங்களைப் போக்குதற்கு ஏதுவாகிய உபா யங்களை எல்லாம் தெரிந்த சத்தியவானது வாய்ச்சொல் உயர் வுடையதாகும் என்பதாம். சாடு

---

## ஙகர வருக்கம்

ஙகர மெனஇனத்தை நன்கு தழுவும்
மகனெடுமா லென்னமகிழ் வான்.

ப - ரை :— ஙகரம்என-ஙகரத்தைப்போல, இனத்தை - தன் இனத்தை, நன்கு - நன்றாக, தழுவும் - பேணுகின்ற, மகன் - புருடனானவன், நெடுமால் என்ன - மகாவிட்டுணுவைப் போல் மகிழ்வான் - மகிழ்ச்சியை அடைவான்.

(எ - று.)

க - து :—இருத்தல், கிடத்தல், நடத்தல் முதலிய தொழில்களைச் செய்யுமிடத்தும் சகல உயிர்களையும் குறிக் கொண்டு பேணும் அறிஞர்கள் விட்டுணுவைப்போலப் பெரு வாழ்வடைவார்கள் என்பதாம். சாகூ

**ஙாவிற் பயனில்லான் நற்றாயர் தந்தையினை(து)**
**ஆவிக் குதவா தவன்.**

ப - ரை :—நல் - நற்குணமுடைய, தாயர் தந்தையினது - மாதா பிதாக்களுடைய, ஆவிக்கு - உயிர்களுக்கு, உதவாதவன் - உபகரியாதவன், ஙாவில் - ஙா என்னும் எழுத்தைப் போல், பயன் இல்லான் - பிரயோசனம் அற்றவன் ஆவான், (எ - று.)

க - து :—தாய் தந்தையர்களை உபசரியாதவன் நற்கதியடையமாட்டான் என்பதாம். சரு

**ஙிகர மதுபோல்வான் நீதிமன்னர் வண்மைப்**
**புகழ்மறைக்கும் மாற்றம்விரும்பும்.**

ப - ரை :—ஙிகரம் அது - ஙி என்னும் எழுத்தை, போல்வான் - ஒத்தவன், நீதிமன்னர் - நடுநிலைமையை உடைய அரசரது, வண்மை - வளப்பத்தையுடைய, புகழ் - கீர்த்தியை, மறைக்கும் - ஒளித்துச் சொல்லும், மாற்றம் - தப்புவார்த்தையை, விரும்பும் - விரும்புவான். (எ - று.)

க - து :—அதோமுக விருத்தி உடையவன் கொடுங்கோல் அரசரை மிகவும் புகழ்ந்து, செங்கோல் அரசாங்கத்தின் பெரும் புகழை மறைப்பான் என்பதாம். சசு

**ஙீகார மன்னன் நிலத்தி லொருவருண்ணும்**
**ஆகார மீந்துமறி யான்.**

ப - ரை :—நிலத்தில் - இப்பூமியின் கண், ஒருவர் - ஒருவருக்கு, உண்ணும் - அவரால் உண்ணப்படும் அளவினதாகிய, ஆகாரமும் - உணவையும், ஈந்து அறியான் - கொடுத்தறியாதவன், ஙிகாரம் ஙி என்னும் எழுத்தை, அன்னான் - ஒத்தவனுவான். (எ - று.)

க - து :—ஒருவர் உண்ணும் அளவினதாகிய உணவையும் கொடாதவன் முழு லோபியாவான் என்பதாம். சஎ

நுவ்வனையார் தம்மை நுவலின் நுடக்குமின்னற்
பௌவ மதிற்றாழ் பவர்.

ப - ரை :—நு அனையார் தம்மை - நு என்னும் எழுத்தைப் போன்றவரது இயல்பை, நுவலின் - சொல்லப்புகின், நுடக்கும் - துவட்சியை உண்டாக்குகிற, இன்னல்-துக்கம் என்னும், பௌவமதில்-சமுத்திரத்தில்; தாழ்பவர்-விழ்வோர் ஆவார். (எ - று.)

க - து :—இரண்டுபட்ட கருத்துடையவர் பெருந் துக்கத்தில் ஆழ்வார் என்பதாம். சஅ

நூகார மேயனையார் நோன்பொன்றும் நோற்றறியாத்
தேகாபி மானத் தினர்.

ப - ரை :—நோன்பு - விரதங்களுள், ஒன்றும் - யாதொன்றையும், நோற்று அறியா - முறைப்படி மேற் கொள்ளாத, தேக அபிமானத்தினர் - தேக ஆத்ம புத்தியை உடைய

வர், நூகாரமே - நூ என்னும் எழுத்தையே அனையார் - ஒத்தவராவர். (எ - று.)

க - து :—ஒரு விரதத்தையும் சாதியாதவருக்கு அந்தக் கரணம் பரிசுத்தம் அடையாதென்பதாம். ௬௯

**ஙெகர மதுகடுப்போர் நீடுறுதன் னூரும்**
**பகரவிளங் காத பலர்.**

ப - ரை :—நீடுறு - விசாலமாகிய, தன் னூரும் - தத்தம் ஊரில் உள்ளவரும், பகர - புகழும்படி, விளங்காத - விளங்கமாட்டாத, பலர் - பலரும், ஙெகரம் அது - ஙெ என்னும் எழுத்தை, கடுப்போர் - ஒத்தவராவார். (எ - று.)

க - து :—சிறிது புகழும் இல்லாதவர் இழிந்தோரே யாவர் என்பதாம். ௭0

**ஙேகாரம் போல்வார் நிறையுமறை யுள்வல்லோர்க்**
**ஆகா தனவிழைகின் றூர்.** (௫)

ப - ரை :—நிறையும் - சகல பொருள்களும் நிறைந்துள்ள, மறையுள் - இரகசியத் தன்மை உடைய வேதாகமங்களுள், வல்லோர்க்கு - எல்லாம் வல்ல பெரியோருக்கு, ஆகாதன - சம்மத மில்லாத விதிகளை, விழைகின்றூர் - விரும்புகின்றவர்கள், ஙேகாரம் - ஙே என்னும் எழுத்தை, போல்வார் - ஒத்தவராவார். (எ - று.)

க - து :—சர்வார்த்தங்களையும் கூறும் சுருதிகளில் உள்ள பூர்வபட்ச விதிகளையே கைக்கொள்வோர் மோட்ச விருப்பம் இல்லாதவர்கள் என்பதாம்.

**ஙையனையார் மேலோர் நவில்கின்ற நன்மொழியில்
ஐயம் நினைக்கின் றவர்.**

ப - ரை :—மேலோர் - பெரியோர்களால், நவில்கின்ற - போதிக்கப்படுகின்ற, நன்மொழியில் - இதோபதேசச் சொற்களில், ஐயம் நினைக்கின்றவர் - சந்தேகப்படுகின்றவர்கள், ஙை அனையார் - ஙைஎன்னும் எழுத்தை ஒத்தவராவார். (எ - று.)

க - து:—பெரியோர்களின் உபதேசத்தில் சந்தேகப்படுகின்றவர்கள் முத்தி அடையார் என்பதாம். ௫௨

**னொகரம் அதுபுரைவார் நூலுணர்ச்சி யின்றிப்
பகர மிகப்பூண் பவர்.**

ப - ரை :—நூல் - நல்ல சாத்திரங்களைக் கற்பதனால் உண்டாகும், உணர்ச்சி - நல்லறிவு, இன்றி - இல்லாமல், பகரம் - இடம்பத்தை, மிகப்பூண்பவர் - மிகவும் மேற்கொண்டு நடிப்பவர், னொகரம் அது - னொ என்னும் எழுத்தை, புரைவார் - ஒத்தவராவார். (எ - று.)

க - து :—இடம்பம் உடையார் ஒரு பயனும் அடையார் என்பதாம். ௫௩

**னோகார மேயனையாள் நுண்ணியரும் நணறுகொண்கற்
ஆகா நடையி னவள். [௫]**

ப - ரை :—நுண்ணியரும் - நுட்பமான உணர்வுடைய பெரியோரும், நண்ணு - விரும் பத்தக்க, கொண்கற்கு - தனது நாயகனுக்கு, ஆகா - அமைந்து ஒழுகமாட்டாத, நடையின வள், (கூடா ஒழுக்கமுடைய) பெண்ணானவள், னோகாரமே - னோ என்னும் எழுத்தை, அனை யாள் - ஒத்தவளே ஆவாள். (எ - று.)

க - து :—நாயகனுக்கு இசைந்து ஒழுகாதவள் எவ் ளவு நன்மையுள்ளவளாயினும் கதி அடையாள் என்பதாம். ௩௪

**னௌவனையார் தம்முறவை நாடு மவர்க்கறுவித்
தெவ்வர்களை நம்பும் சிலர்.**

ப - ரை :—தம் உறவை - தமது சிநேகத்தை, நாடும் அவர் - இச்சித்தவர்களை, கறுவி - கோ பித்து, தெவ்வர்களை - பகைவரை, நம்பும் - சிநேகிக்கும், சிலர் - சிலமாந்தர், னௌ அனை யார் - னௌ என்னும் எழுத்தை ஒத்தவ ராவார். (எ - று.)

க - து :—உறவினரைப் பகைத்து, பகைவரைச் சிநே கிக்கவிரும்புவோர் கீழ்மக்களில் கடையாவார், என்பதாம். ௩௫

# சகர வருக்கம்

சஞ்சல மின்றித் தவமுயலுந் தக்கோருக்(கு)
அஞ்சனல்க வல்லானு ளான்.

ப - ரை :—சஞ்சலம் இன்றி - மனத்திற் றுன்பம் இல்லாமல், தவம் முயலும்-தவத்தைச் செய்யும், தக்கோருக்கு - உத்தமருக்கு எதிர் வந்து, அஞ்சல் நல்க - அடைக்கலம் தந்து இரட்சிப்பதற்கு, வல்லான் - எல்லாம் வல்ல கடவுள், உளான் - ஒருவர் இருக்கின்றார். (எ - று.)

க - து :—மெய்த்தவம் உடையோர்க்குப் பிரத்தியட்சமாகிவேண்டியவைகளைத் தந்து காக்கவல்ல சர்வலோக நாயகன் ஒருவன் உண்டென்பதாம். ௫௬

சாலுங் கருணை தவத்திற் குறுதுணைஎன்(று)
ஓலும் பலநூ லுள.

ப - ரை :—சாலும் கருணை - மிகுந்த சீவகாருண்யமானது, தவத்திற்கு - ஒருவர் செய்யும் தவத்தினுக்கு, உறுதுணை என்று - இன்றியமையாத் துணை என்று, ஓலும் - முறையிடுகின்ற, பல நூல் - பல நூல்கள், உள - இவ்வுலகத்துள்ளன. (எ-று.)

க - து :—சீவகாருணியமே தவத்திற்கு முக்கிய சகாயம் என்று வற்புறுத்தும் பல நூல்கள் இவ்வுலகத்துள்ளன என்பதாம். ௫௭

**சித்திப் பெருக்கம் திகழப் பெருர்தவத்திற்**
**சத்தியமின் றென்னந் தகும்.**

ப - ரை:—சித்திப்பெருக்கம் - சித்தியென்னும் ஆக்கமானது, திகழ - தம்மிடத்தில் விளங்கும்படி, பெருர் - பெற்றுக்கொள்ளமாட்டாதவரது, தவத்தில் - தவத்தின்கண், சத்தியம் - சத்தியத்தன்மை, இன்று என்னத்தகும் - இல்லை என்று சொல்லப்படும். (எ - று.)

க - து:—பொய்த்தவசிகட்கு அட்டமாசித்திகள் உண்டாகா என்பதாம்.

ருஅ

**சீர்பொருந்தப் பெற்றிருந்தும் சேதப் படாதபுகழ்**
**பார்பொருந்தச் செய்யார் பதர்.**

ப - ரை:—சீர் - செல்வத்தை, பொருந்த - தம்மிடத்திற் பொருந்த, பெற்றிருந்தும் - அடைந்திருந்தும், சேதப்படாத - நாசம் அடையாத, புகழ் - கீர்த்தியை, பார் - உலகின்கண், பொருந்தச் செய்யார் - நிலைபெறச் செய்யமாட்டாதவர், பதர் - பதராவார். (எ - று.)

க - து:—செல்வம் உடையவராயிருந்தும் தமது கீர்த்தியை உலகத்தின்கண் நிலைபெறச் செய்யாதவர்கள் பதருக்கு ஒப்பாவார் என்பதாம்.

ருகூ

**சுண்ணந் திமிர்ந்தமுலைத் தோகையர்சொற் கைப்போரும்**
**வண்ணத் தமிழ்க்குருகு வார்.**

ப - ரை:—சுண்ணம் - வாசனைக் குழம்போடு விரவிய கனகப்பொடிகளால், திமிர்ந்த -

அப்பப்பட்டுள்ள, முலை - தனங்களை உடைய, தோகையர் - மங்கையரது, சொல் - சொற்களை, கைப்போரும் - வெறுத்துள்ள மெய்ஞ்ஞானிகளும்; வண்ணத் தமிழ்க்கு - சந்தத் தமிழ்ப் பாடல்களுக்கு, உருகுவார் - மனம் குழைவார். (எ - று.)

க - து :—சந்தப்பாடலைக்கேட்ட ஞானிகளும் மனம் உருகி ஆனந்திப்பார் என்பதாம். ௯0

**சூகரமே போலும் தொடக்கருக்குத் தொண்டுசெய்து தேகம் வளர்ப்பார் சிலர்.**

ப - ரை :—சூகரமே போலும் - ஊர்ப்பன்றியையே ஒத்துள்ள, தொடக்கருக்கு - புலைத் தன்மையை உடையவருக்கு, தொண்டு செய்து - குற்றேவல் செய்து, தேகம் - தங்களுடைய உடல்களை, வளர்ப்பார் - வளர்த்துக்கொண்டு உழல்வோரும், சிலர் - இவ்வுலகத்திற் சிலர் உளர். (எ - று.)

க - து :—புலைத்தன்மையை உடையவர்களிடத்தில் சேவித்து உடலோம்பும் பாதகரும் இப்பூமியில் சிலர் உளர் என்பதாம். ௯க

**செத்துப் பிறவாமை சித்திக்கச் சிந்திப்போன் முத்துப்போன் றுள்ள முனி.**

ப - ரை :—செத்துப் பிறவாமை - இறப்பும் பிறப்புமற்ற மோட்சமானது, சித்திக்க - தனக்

குக்கிடைக்கும்பொருட்டு, சிந்திப்போன் - அதற்கேற்ற சாதனங்களை ஆராய்பவன், முத்துப் போன்றுள்ள - முத்தைப்போன்ற பரிபாகமுடைய, முனி - முனிவனாவான். (எ-று.)

க - து :—முத்தி உபாயங்களை நன்கு ஆராய்ந்து உள்ளபடி உணர்ந்து அவ்வுபாயப்படி தீவிரமாய் முயல்கின்றவனே அதிபக்குவன் என்பதாம். சுஉ

**சேணுட் டரம்பையர்க்காத் தின்னுத தின்னுமவர்**
**காணுர்க ளுண்மைக் கதி.**

ப - ரை:—சேணுட்டு - தெய்வலோகத்துள்ள, அரம்பையர்க்கா - தெய்வப்பெண்களைக் கூடிச் சுகிப்பதின் பொருட்டு, தின்னுத - தின்னத் தகாதவைகளை, தின்னும் அவர் - தின்கின்றவர்கள், உண்மைக்கதி - சத்திய மோட்சத்தை, காணுர்கள் அறிந்து அடைய மாட்டார்கள். (எ - று.)

க - து :—அழியக்கூடிய தேவலோக போகத்தை இச்சித்து வேள்வியில் ஊன் தின்பவர் நித்தியமாகிய முத்தியின் பத்தை அறியார் என்பதாம். சுக

**சைவ முதலாம் சமயங்க ளோராறும்**
**தெய்வமுன்னை நாளிற் செயல்.**

ப - ரை :—சைவம் முதலாம் - சைவம் முதலாகச் சொல்லப்பட்ட, சமயங்கள் ஓர் ஆறும் - அறுவகைச் சமயங்களும், தெய்வம் - ஈசுவர

ளல், முன்னை நாளில் - ஆதி காலத்தில், செயல் - உயிர்களின் நிமித்தம் அமைக்கப் பட்டவைகளாம். (எ - று.)

க - து :—ஆறு சமயங்களும் கடவுளால் ஆதி காலத்தி லேயே நியமிக்கப்பட்டன என்பதாம். ௬௨

**சொல்லும் பொருளும் சுமையாகத் தோன்றியபின் அல்லும் பகலும் அறும்.**

ப - ரை :—சொல்லும்-வார்த்தைகளும், பொருளும் - அவற்றின் அருத்தங்களும், சுமை யாக - பாரமாக, தோற்றியபின் - ஒருவருக் குத் தோற்றியதற்கு மேல், அல்லும் - ஆணவ மலமும், பகலும் - மாயாமலமும், அறும் - நீங்கும். (எ - று.)

க - து :—ஒருவனுக்கு எல்லாத் தொழிலும் அடங்கு மாயின் அதற்கு மேல் ஆணவாதி மலங்கள் நீங்கும் என்பதாம்.

**சோகம் வரினும் துணிவுபற்றித் தொண்டுசெய்வார்க்(கு) ஏக னடிக்கீ ழிரை.**

ப - ரை :—சோகம் வரினும் - தவத்திற்கு இடையூறாகப் பல துயரங்கள் நேரிடினும், துணிவுபற்றி - அவற்றிற்கு அஞ்சாது மனோ திடம் கொண்டு, தொண்டு செய்வோர்க்கு - கடவுளை உபாசிப்போர்க்கு, ஏகன் - ஒன்று கிய அக்கடவுளினது, அடிக்கீழ் - திருவடி நீழ லானது, இரை - இருப்பிடமாகும். (எ-று.)

க - து :—திடசித்தத்தோடு இறைவனை உபாசிப்போர் அவ் இறைவனது திருவடி நீழலில் வசிப்பார் என்பதாம். ௬௬

**சௌவிய மார்க்கந் தணந்தேனைத் தாழ்வடைவார்**
**ஔவிய நெஞ்சத் தவர்.**

ப - ரை :—சௌவிய மார்க்கம் - நற்சமயங்களை, தணந்து - நீங்கி, ஏனை - மற்றைய, தாழ்வு - புறச்சமயங்களை, அடைவார் - சேர்பவர், ஔவிய - சகல துர்க்குணங்களையுமுடைய, நெஞ்சத்தவர் - மனத்தினர் ஆவார். (எ - று.)

க - து :—தமக்குரிய நன்மார்க்கத்தை விட்டு மற்றொரு தீயமார்க்கத்திற் சென்றவர்போன்ற துட்டர்கள் இல்லை என்பதாம். ௬௭

## ஞகர வருக்கம்

**ஞமலி யெனத்திரிந்து நாட்கழிக்க லாகா(து)**
**அமலமுத்தி வேண்டு மவர்.**

ப - ரை:—அமலமுத்தி - பரிசுத்தமாகிய முத்தியை, வேண்டும் அவர் - அடைய வேண்டினோர், ஞமலியென - நாயைப்போல, திரிந்து - ஐம்புலன் வழியே ஓடி உழன்று, நாள் - வாழ்நாளை, கழிக்கல் ஆகாது - வீணாகப் போக்கலாகாது. (எ - று.)

க - து :—மோட்சத்தை இச்சித்தவர்கள் வீண் காலம் போக்கலாகாது என்பதாம். ௬௮

ஞாலம் படைத்தளித்து நாசமுறச் செய்யுமொரு
மேலவனே மெய்யனைத்தின் மெய்.

ப - ரை :—ஞாலம்-உலகத்தை, படைத்து சிருட்டித்து, அளித்து - காத்து, நாசம்உற - பின்னர் நாசமடைய, செய்யும் - செய்யவல்ல, ஒரு மேலவனே - ஒப்புயர்வற்ற பரனே, மெய் அனைத்தின் - உண்மைப் பொருள்கள் எல்லாவற்றுள்ளும், மெய் - உண்மைப்பொருளாம். (எ - று.)

க - து :—ஐந்தொழிற் பரனாகிய உலக முதல்வனே ஒப்புயர்வில்லாத முதற்கடவுள் என்பதாம். சுசு

ஞிமிறருந்தப் பாய்மதத்த நீள்மா இனத்தில்
தமிழ்வரைப்பால் தோன்றல் தலை.

ப - ரை:—ஞிமிறு - வண்டுகள் - அருந்த - உண்ணும்படியாக, பாய் - வழிந்து ஒழுகாநின்ற, மதத்த - மதத்தையுடைய, நீள்மா இனத்தில் - நெடிய யானை வருக்கங்களுள், தமிழ் வரைப்பால் - தமிழ் மணம் வீசும் பொதியை மலைச்சாரலில், தோன்றல் - உற்பத்தியாகிய யானைகள், தலை - சிறப்புள்ளவைகளாம். (எ - று.)

க - து :—மத யானைகளுக்குள்ளே பொதியை மலைச் சாரலிற் பிறந்த யானைகளே சிறப்புடையவைகள் என்பதாம்.

**ஸ்ரீயென் றிரையாத நீலவண்டொப் பாம்விழியார்த்**
**தாயென்றே கொள்வார் தவர்.**

ப - ரை:—ஸ்ரீ என்று - ஸ்ரீ என்னும் ஓசையுடன், இரையாத - சப்தியாத, நீலவண்டு - கரிய வண்டுகளுக்கு, ஒப்பாம் - சமானமான, விழியார் - கண்களையுடைய பெண்களை, தவர் - தவசிகள், தாய் என்றே - தம்முடைய அன்னையர்களாகவே, கொள்வார் - மதித்துக் கொள்ளுவார். (எ - று.)

க - து :—தவசிகள் எல்லாப்பெண்களையும் தம் அன்னையர் என்றே காண்பர் என்பதாம். ௭௧

**ஞுகர மெனப்பயனில் நூல் விரிக்கு மாந்தர்**
**இகபரத்தும் பேறொன் றிலார்.**

ப - ரை :—ஞுகரம் என - ஞு என்னும் எழுத்தைப்போல், பயன் இல் - பெரும்பயனில்லாத, நூல் - சாத்திரங்களை, விரிக்கும் - கற்றுப் பிதற்றுகின்ற, மாந்தர் - மனிதர்கள், இகபரத்தும் - இம்மை, மறுமை என்று சொல்லப்படும் இரு லோகங்களிலுமுள்ள, பேறு - பயன்களில், ஒன்று இலார் - ஒன்றையும் அடையார். (எ - று.)

க - து :—பயனற்ற நூல்களைப் படித்துக் கொண்டு உழல்பவர் இருவகைப் பயன்களையும் அடையார் என்பதாம்.

ஞாகாரம் போல்வளர்ந்து நூருண் டிருந்துமுத்திக்(கு)
ஏகா திறத்தல் இழிவு.

ப - ரை :—ஞாகாரம் போல் - ஞா என்னும் எழுத்தைப்போல, வளர்ந்து - வளர்ச்சியடைந்து, நூறு ஆண்டு - அநேக நாட்கள், இருந்தும் - வாழ்ந்திருந்தும், முத்திக்கு - நித்தியமாகிய மோட்ச உலகத்துக்கு, ஏகாது - செல்லாமல், இறத்தல் - மரணமடைதல், இழிவு - மனிதராய்ப் பிறந்தவருக்கு இழிவாகும். (எ - று.)

க - து :—மனிதராய்ப் பிறந்து சரீரவளர்த்தோடு அநேக நாட்கள் வாழ்ந்திருந்தும் முத்தியடையாமல் வீணைக மாசு மடைவது மானிடர்க்கு நிந்தையாகும் என்பதாம். எக

ஞெண்டில் முழுமதியம் நேர்நாள் உதித்தாற்கும்
அண்டினரைக் காப்ப தணி.

ப - ரை. —ஞெண்டில் - கடக ராசியில், முழுமதியம் - முழுவலிபெற்ற பூரணச் சந்திரன், நேர்நாள் - தங்கும் தகுதியான காலத்தில் உதித்தாற்கும் - பிறந்தவனுக்கும், அண்டினரை - அடுத்தவர்களை, காப்பது - இரட்சிப்பது, அணி - அலங்காரமாகும். (எ - று.)

க - து :—அரசாட்சி முதலிய பெருஞ் செல்வமுடையவருக்கும் தம்பால் அடைக்கலமாய் வந்தவர்களைப் பாதுகாப்பது சிறந்த ஆபரணம் ஆகும் என்பதாம். எஅ

ஞேயமே யிரு நிகழ்த்துமொரு மூன்றினுண்மை
ஆயவல்லார் ஞானம் அழகு.

ப - ரை.—ஞேயமேயிரு - ஞாதருமுதலாக ஞேயம் ஈறாக, நிகழ்த்தும் - சொல்லப்பட்ட, ஒருமூன்றின் உண்மை - திரிபுடியினது (காண்பான் - காட்சி - காணப்படுபொருள் என்னும்) மூன்றினது உண்மையை, ஆயவல்லார் - ஆராய்ந்து அநுபவிக்க வல்லவரது, ஞானம் - ஞானமே, அழகு - அழகுடையதாகும். (எ-று.)

க - து :—ஞாதரு, ஞானம், ஞேயம் என்பவற்றின் உண்மை இலக்கணங்களை அறிந்து அநுபவிக்க வல்லவரே மெய்ஞ்ஞானிகளாவார் என்பதாம். எசு

ஐயென்றற் கொல்கா நரரெல்லாம் நன்மையொன்
செய்யென்னிற் செய்யார் தெரிந்து. [றுஞ்

ப - ரை :—ஐ என்றற்கு - ஐ என்று யாவரும் இகழ்வதற்கு, ஒல்கா - சற்றும் வெட்கமடையாத, நரர் எல்லாம் - மனிதர் யாவரும் நன்மை - நன்மைகளை, செய் என்னில் - செய்யும்படி அறிவுடையோர் கூறினும், ஒன்றும் - ஒரு நன்மையையும், தெரிந்து - செய்யும் வகையறிந்து, செய்யார் - செய்யமாட்டார்கள்.

(எ-று.)

க - து :—பழிக்கு அஞ்சாதவர்கள் ஒரு நன்மையும் செய்தற்கு உடன்படார் என்பதாம். எஎ

ஞொள்கா நிலைநின்று நோற்றோர் திருவுருவம்
உள்காதார்க் கில்லை யுரம்.

ப - ரை:—ஞொள்கா நிலை - சலனமில் லாத நிலையில்; நின்று - நிலை பெற்று, நோற்று - தவம் புரிந்து, ஓர் திருவுருவம் - ஒரு மூர்த்தியின் திருவுருவத்தை, உள்காதார்க்கு - தியானியாதவர்கட்கு, உரம் - அருள் வலிமை, இல்லை - உண்டாகாது.

(எ - று.)

க - து:—உருவ வழிபாட்டையுடைய மெய்த்தவநி லைச்செயன்றி மற்றையருக்கு அருட்சித்தி உண்டாகாது என் பதாம். ௭௭

ஞோகாரம் போற்றுலங்கி நுண்ணிமையொன் றுந்
போகாங்கர் பூமிப் பொறை. [தெரியாப்

ப - ரை:—ஞோகாரம் போல் - ஞோ என் னும் எழுத்தை ஒத்து, துலங்கி - விளங்கியும், நுண்ணிமை - கடவுள் உணர்ச்சி, ஒன்றும் - சிறிதும், தெரியா - இல்லாத, போகாங்கர் - விடயபோக உணர்வை உடையவர்கள், பூமி - இந்நிலத்திற்கு, பொறை - பாரமாவார்கள்.

(எ - று.)

க - து:—ஆத்தும விசாரணையில்லாத மூடர்கள் பூமிக் குச் சுமையாவார் என்பதாம், ௭௮

ஞெளவிற் கடையாய் நவிலப் படாதிருந்தும்
செவ்விற் றிகழ்வார் சிலர்.

ப - ரை —ஞெளவில் - ஞெள என்னும் எழுத்தைப்போல, கடையாய் - கீழ்மை உடையவராய், நவிலப்படாது இருந்தும் - மேலோர்களால் புகழப்படாதிருந்தும், செவ்வில் - நற்குண நற்செய்கையுடையவர் போல், திகழ்வார் - இப்பூமியில் விளங்குபவர், சிலர் - சிலபேர். (எ - று.)

க - து :—அகத்திற் கொடுமையும் புறத்தில் நன்மையும் உடைய வஞ்சகர் இப்பூமியிற் சிலர் உளர் என்பதாம். எக

## டகர வருக்கம்

இடம்பன் இழிஞனென்னும் ஈயார்க் கியல்பாம்
மடம்படுதீச் சொற்கருதார் வாய்.

ப - ரை:—ஈயார்க்கு - ஈகையில்லாதவருக்கு, இயல்பாம் - சுவாபமாகிய, மடம்படு - பேதைமையால் உண்டாகும், தீச்சொல் - கொடும் சொற்களை, கருதார் - நினைத்துப் பாராதவருடைய, வாய்-வாயானது, இடம்பன்- போலிப்பகட்டுச் செயலுடையவனை, இழிஞன் என்னும் - தாழ்ந்தவன் என்று சொல்லும். (எ - று.)

க - து :—உலோபிகளுடைய தீமைகளை நன்குணராதவர் இடம்பனைத் தீயவன் என்றுரைப்பார் என்பதாம். அ0

**இடாதார் மனைமுன்றிற் கேகுவிக்கும் தாமுன்**
**கொடாதார் வினைப்பேய்க் குழாம்.**

ப ரை :—தாம் - இப்பிறப்பில் தரித்திரராய் உள்ளவர்கள், முன் - முற்பிறப்பின் கண், கொடாதார் - ஈகையில்லாதவர் ஆகையால் அவரை, வினைப் பேய்க்குழாம் - தீவினையாகிய பேய்க் கூட்டமானது, இடாதார் - உலோபிகளுடைய மனை - வீட்டினது, முன்றிற்கு - வாயிலுக்கு, ஏகுவிக்கும் - போகச் செய்யும். (எ - று.)

க - து :—முற்பிறப்பில் ஈகையில்லாதவர் அத்தீவினையால் இப்பிறப்பில் தரித்திரராய் உலோபிகளிடத்தில் சென்றிரப்பார் என்பதாம். அக

**இடி நாணச் சொற்பகரும் ஏந்திழையாட் கில்லை**
**குடி மாண்பு காக்கும் குணம்.**

ப - ரை:—இடி - இடியோசையும், நாண - நாணும்படியாக, சொல் - கொடுஞ் சொற்களை, பகரும் - பேசுகிற, ஏந்து இழையாட்கு - பெண்ணுக்கு, குடிமாண்பு - தன்குல ஒழுக்கத்தை, காக்கும் - பாதுகாக்கவல்ல. குணம்- நற்குணமானது. இல்லை - இராது. (எ - று.)

க - து :—யாவரிடத்தும் கொடுஞ் சொற்சொல்லும் பெண்ணுக்கு நற்குண நற்செய்கைகள் இல்லை என்பதாம். அஉ

**இடீர்நுங் குடர்விழையும் எஃகவே லோர்க்கும்
கொடீர்கொல் உணர்மின் குறித்து.**

ப - ரை:—இடீர் - ஈகையில்லாத லோபிகளே, நும் - உங்களுடைய, குடர் - குடல்களை, விழையும் - கிழிக்க விரும்பும், எஃகவேலோர்க்கும் - கூர்மை பொருந்திய ஆயுதத்தை உடையவர்க்கும் கூட, கொடீர் கொல் - கொடுக்க மாட்டீர்களா? குறித்து - இதை உங்கள் உள்ளத்தில் குறித்து, உணர்மின் - ஆலோசித்தறியுங்கள். (எ - று).

க - து:—உலோபிகளே! உங்களைக் கொல்லத்துணியும் கொடுங்கோல் அரசர் முதலானவர்களுக்குங்கூட உங்கள் பொருளைக் கொடுக்க மாட்டீர்களா? யோசித்துச் சொல்லுங்கள் என்பதாம். அ௩

**உடுக்கை நிகரிடையார் ஒண்முலைமால் விஞ்சிக்
கெடுக்கையுற்றார்க் கில்லை கிளை.**

ப - ரை:—உடுக்கை - உடுக்கை யென்னும் வாத்தியத்தை, நிகர் - ஒத்த, இடையார் - சுருங்கிய இடையையுடைய பெண்களுக்குள்ள, ஒண் - ஒள்ளிய, முலை - தனங்களால் உண்டாகும், மால் - மயக்கமானது, விஞ்சி - அதிகரித்து, கெடுக்கை - தங்களைக் கெடுக்கும் தன்மையில், உற்றார்க்கு - கூடாவொழுக்கம் பொருந்தி

னோர்க்கு, கிளை - உறவினர் முதலோர், இல்லை - இல்லையாகும். (எ - று).

க - து :—பெண்களால் உண்டாகும் மயக்கம் அதிகரித்துத் தங்களைக் கெடுக்க, அதனாற் கெட்டோர்க்கு யாவரும் பகை யாவார் என்பதாம்.

**உடீஇக் கலைதலேய்க்கு மூனென் றுணரான்**
**கெடீஇத் தீளைக்கும் கிறி.**

ப - ரை:—ஊன் - சரீரமானது, உடீஇ - உடுத்து, கலைதல் - கலையும் ஆடையை, ஏய்க்கும் - ஒக்கும், என்று - என்று ஆராய்ந்து, உணரான் - அறியமாட்டாத மூடன், கெடீஇ - ஆன்மலாபத்தை இழந்து, கிறி - நிந்தையை, திளைக்கும் - அநுபவிப்பான். (எ - று).

க - து :—உடம்பு எவ்விதத்தும் அழியும் என்று உணராமல் கொலை, புலை முதலிய பெரும் பாவங்களையே செய்து அச் சரீரத்தைப் பாதுகாக்க நினைக்கும் மூடன், ஆன்மலாபமு மின்றிப் பின்பு இழிந்த மிருகங்களாய்ப் பிறந்து யாவராலும் நிந்திக்கப்படுவோன் என்பதாம்.

**இடெனிற் பழிசொல்வோர் எவ்விதத்தும் தாம்பின்**
**கொடேன இரப்பார் குறுகி.**

ப - ரை:—இடு எனில் - நல்லவர்களுக்கு வேண்டுவதைக் கொடுப்பாயாக என்று ஒருவர் கூறில், பழிசொல்வோர் - அவ்விருவரையும் நிந்திக்கும் உலோபிகள், தாம் - செல்வரா

யிருந்த தாமே, பின் - பின்பு, குறுகி - தரித் திரத்தாற்குன்றி, கொடு எனா - பிறரிடத்திற் போய் எனக்கு இன்னது தருவாயாக என்று கேட்டு, எவ்விதத்தும் - எந்தவிதத்திலும், இரப்பார் - யாசிப்பார். (எ - று).

க - து :—நல்லோரை நிந்தித்த லோபிகள் பின் தரித்திரராய் இரந்து உழல்வார் என்பதாம். ௮௬

இடேனென் றிறுமாக்கும் ஈனர்தம்முன் கூற்றும்
விடேனென் றுறுக்கிவரு மே.

ப - ரை:—இடேன் என்று - ஒருவருக்கும் ஒன்றும் கொடேன் என்று, இறுமாக்கும் - இறுமாப்படைந்திருக்கும், ஈனர் தம்முன் - உலோபிகளுக்கு எதிரே, கூற்றும் - யமனும், விடேன் என்று - இனி உங்களை விடமாட்டேன் என்று, உறுக்கி - பயமுறுத்திக் கொண்டு, வரும் - வருவான். (எ - று).

க - து :—கொடேன் என்று இறுமாப்புற்றிருக்கும் உலோபிகளை எமன் விடேன் என்று பயமுறுத்திக்கொண்டு வருவான் என்பதாம். ௮௭

இடையுண்டில்லையெனும்சிற்றேந்திழையார்கண்வேற்
படைவென்றோர்க் கில்லை பழி.

ப - ரை:—உண்டு இலை என்னும் - தோன்றாமையால் உண்டோ இல்லையோ எனக் கண்டோர்க்குச் சந்தேகத்தைத் தருகிற, இடை -

இடையையும், சிற்று ஏந்து இழையார் - மங்கைப் பருவத்தையும் உள்ள பெண்களுடைய, கண் - கண்களாகிய வேற்படை - வேலாயுதங்களை, வென்றோர்க்கு - செயித்தவர்களுக்கு, பழி - நிந்தை என்பது, இல்லை - உண்டாகாது. (எ - று).

க - து :—மங்கையர் மோகத்தில் அழுந்தாதாருக்கு நிந்தை இல்லை என்பதாம். அஅ

உடோழிற் பயன்கிடைத்தாங் குற்சாகங் கொண்டு
கெடோருவன் கீழவரிற் கீழ்.

ப - ரை :—உள் - தன்னால் விரும்பப்பட்ட, தொழில் - தொழிலினது முயற்சியால் உண்டாகும், பயன் - பயனானது, கிடைத்தாங்கு - கைகூடாதிருக்கவும், கூடியதாகவே துணிந்து, உற்சாகங்கொண்டு - மன எழுச்சி கொண்டு, கெடு - கெடுகிற, ஒருவன் - ஒரு மனிதன், கீழவரில் - நீசோர் பலருள்ளும், கீழ் - தாழ்ந்தவனாவான். (எ - று).

க - து :—தான் செய்யுந் தொழிலால் வரத்தக்கதாகத் தான் விரும்பியிருக்கும் பயனானது கிடையாதிருக்கவும், கிடைத்ததாகத் திருத்தியடைந்து கெடுகிறவனைக் காட்டிலும் தாழ்ந்தோர் எவ்விடத்தும் இல்லை என்பதாம். அக

உடோகையுடன் உண்பயனும் ஒன்றுறு லோபம்
படோ ஓர் பெருஞ்செல்வன் பால்.

ப - ரை:— உலோபம் - லோப குணத்தை, படு - பொருந்திய, ஓர் பெருஞ் செல்வன் பால்- ஒரு பெருஞ்செல்வம் உடையவனிடத்து, உடு ஓகையுடன் - உடுத்தலால் வரும் மகிழ்வுடன், உண்பயனும் - உண்ணுதலால் வரும் திருத்தியும், ஒன்றாது - உண்டாகாது. (எ - று).

க - து:— பெருஞ்செல்வம் உடையவனாயினும், உலோபியானவன் உண்ணல், உடுத்தல்களால் வரும் பயனையும் பெறாது இழப்பான் என்பதாம். ௬௦

**இடௌகாரத் தின்னுருவம் ஏய்ந்தாங் கொருநீர்**
**கொடுவிளங்கல் முன்னூழ்க் குறி.**

ப - ரை:— இடௌ காரத்து - டௌ என்னும் எழுத்தினிடத்துள்ள, இன் உருவம் - ளகர எழுத்தானது, ஏய்ந்தாங்கு - உறுப்பாகப் பொருந்தியதுபோல், ஒரு நீர் - ஒருவர் தம்மிடத்துப் பொருந்தத்தகாத ஓர் குணத்தை, கொடு - தமக்கு அங்கமாகக் கொண்டு, விளங்கல் - விளங்குவாராயின், அவ்விளக்கம், முன்னூழ் - அவர் பழவினைப் பயன் இது என்று யாவரும் உணர்தற் கேற்ற, குறி - ஓர் அடையாளமாகும். (எ - று).

க - து:— ளகர வடிவ எழுத்து டௌகாரத்தில் இருந்தும், பொருத்தமில்லாத வகர ஒற்றின் ஒலியை இயக்குதல் போல, ஒருவர் தமது ஒழுக்கத்துக்குமாறுகிய ஒரு குணமுடையவராயின் அதைப் பழவினைப்பயன் என்று அறியவேண்டும் என்பதாம். ௬௧

# ணகர வருக்கம்

இணங்காரை வென்றிட் டிறுமாக்கும் வீரக்
குணங்காவ லர்க்குரிய கோள்.

ப - ரை:—இணங்காரை - சத்துருக்களை, வென்றிட்டு - வெற்றிகொண்டு, இறுமாக்கும்- மிக மகிழ்தற்கு ஏதுவாகிய, வீரக்குணம்-ஆண்மையே, காவலர்க்கு - அரசர்களுக்கு, உரிய - உரித்தாகிய, கோள் - குணமாகும். (எ - று.)

க - து :—பகைவருக்குச் சற்றும் அஞ்சாத பராக்கிரமமே அரசருக்கு அவசியம் வேண்டிய குணமாகும் என்பதாம். கஉ

இணைப்புச்செய் வாரைநம்பி யேங்கும்வினை நீங்கப்
பணைத்தவத்தா லில்லை பயன்.

ப - ரை :—இணைப்பு - ஏமாற்றுஞ் செய்கையை, செய்வாரை - செய்கின்றவிழ்மக்களை, நம்பி - மேலோர்கள் என்று நம்பி, ஏங்கும் - துக்கித்து உழலுகிற, வினை - தொழிலானது, நீங்க - நீங்கும்படி, பணை - செய்யாத, தவத்தால் - தவத்தினால், பயன் - பிரயோசனம், இல்லை - உண்டாகாது. (எ - று.)

க - து :—இம்மையில் யாவரும் அறியும்படி ஒன்றைச் செய்து காட்டமுடியாத தவத்தால் பயன் இல்லை என்பதாம்.

இணியிற் பரனுலகத் தேற்றவல்ல தியாரும்
அணியத் தரும்நல் அறம்.

ப-ரை:—இணியில்-ஏணியைப்போல், பரன் உலகத்து - கடவுள் உலகத்தில், ஏற்ற வல்லது-தன்னை அடுத்தவரை ஏறும்படி செய்யவல்லது யாதெனில்? அது, யாரும் - எல்லோரும், அணியத்தகும் - அலங்கரித்துச் சொல்லத்தக்க, நல் - நன்மையையுடைய, அறம் - தருமமாம்.

(எ - று.)

க - து:—புண்ணியமானது தன்னையடுத்தவரை நற்கதி அடையச் செய்யும் என்பதாம். கூச

இணீற்றிற் புகரமுத லின்மா இடல்தோய்
வெணீற்றின் நெறிபலவா மே.

ப - ரை:—இண் - இடையிலே ணகர ஒற்றையும், ஈற்றில் - முடிவிலே, புகரம் - பு என்னும் எழுத்தையும், முதலில் - முகப்பிலே, மா - மா என்னும் எழுத்தையும், இடல் - இடுதலால் உண்டாகும் மாண்பு என்னும் பதத்தின், அருத்தமாகிய மாட்சிமையை, தோய் - பொருந்திய, வெள் - வெள்ளிய, நீற்றின் - விபூதி சம்பந்தமாகிய, நெறி - சமயங்கள், பல ஆம் - அநேக விதமாம். (எ - று.)

க - து:—விபூதி சம்பந்தமாகிய மதங்கள் பலவாயிருக்கின்றன என்பதாம். கூடு

உணுங்கடற்பின் விட்டான்செய் யொண்கலை தீதென்
குணுங்கரினும் தாழ்வார் குணம். [கை

ப - ரை:—உணுங் கடல் - ஆசமனஞ் செய்து வயிற்றுள் அடக்கிய சமுத்திரத்தை, பின் - மறுபடியும், விட்டான் - விடுத்த அகத்திய முனிவரால், செய் - உண்டாக்கப்பட்ட, ஒண்கலை - ஒள்ளிய தமிழ்மொழியை, இழு என்கை - குற்றமுடையதாய்க் கருதிக் கூறுதல், குணுங்கரினும் - சண்டாளரைப் பார்க்கினும், தாழ்வார்-தாழ்ந்தவரது, குணம்-தன்மையாம். (எ - று.)

க - து .—தமிழ்மொழி தாழ்மையுடையதென்பவர் புலையரினுங் கடையாவார் என்பதாம்.

உணாஉத் துயில்கையெண்ணி யொல்கிப் பரனை நணாஉப் பரவல் நலம்.

ப - ரை:—உணாஉ - தெய்வ பக்தி இல்லாதவர் தாம் தினந் தோறும் வேண்டியவைகளைப் புசித்துக் கொண்டும், துயில்கை - நித்திரை செய்து கொண்டும் காலம் கழிக்கும் தன்மையை, எண்ணி - தாமே ஆலோசித்து, ஒல்கி - இச்செய்கை விலங்கு கட்கே இயல்பு என்றறிந்து நாணி, பரனை - இறைவனை, நணாஉ - விரும்பிப், பரவல் - தினந்தோறும் துதிப்பாராயின், அது, நலம் - நன்மையாகும். (எ - று.)

*க - து :—தினந்தோறும் உண்டு உறங்கி நாள்கழிப்பவர் பயபக்தியோடு கடவுளை முக்கரணங்களாலும் வழிபடுவா ராயின் அது நன்மையைத் தரும் என்பதாம்.* ௧௭

**இணைன்பொறிமுற் சாகாரம் ஏய்ந்த அகட்டால்**
**அணங்குறுதல் பாவத் தரசு.**

ப - ரை:—*இண் என் பொறிமுன் - ஐகார ஒற்றின் முகப்பில், சாகாரம் - சா என்னும் எழுத்தானது, ஏய்ந்த பொருந்திய பதமாகிய சாண் என்னும் அளவினையுடைய, அகட்டால் - வயிறு வளர்க்கையின் நிமித்தத்தால், அணங்குறுதல் - பெருந் துன்பத்தில் அழுந்துவது, பாவத்து அரசு - பாவங்களுள் தலைமை பெற்ற பாவமாகும்.* (எ - று.)

*க - து :—முற்பிறப்பில் செய்த பெரும் பாவமே இப் பிறப்பில் வயிறு வளர்க்கையின் நிமித்தத்தால் பெருந்துன்பத் தில் அழுத்துவிக்கும் என்பதாகும்.* ௧௮

**இணேய்ந்த வீகாரத் தியார்க்கும் உதவி**
**பணேமென்பார் தேடும் பணம்.**

ப - ரை:—*இண் - ணகர ஒற்றை, ஏய்ந்த - ஈற்றில் கண் உடைய, வீகாரத்து - வீகார மாகிய வீண் என்னும் பதத்தின் அருத்த மாகிய பயனின்மையை உடையது யாது? எனில், அது, யாருக்கும் - ஒருவர்க்கும், உதவி - உபகாரத்தை, பணேம் - செய்யமாட்டோம்,*

என்பார் - என்பவர்களால், தேடும் - சம்பாதிக்கப்பட்ட, பணம் - பொருளாகும்.
(எ - று.)

க - து.—உதவி செய்யாதவர் சம்பாதிக்கிற பொருள்பய னற்றதென்பதாம். கக

**இணைக்கும்ப மென்முலையார் இச்சைவிஞ்சித் தாமே
அணைக்கின்ற தின்பத் தணி.**

ப - ரை:—இணை - ஒன்றையொன்று ஒத்த இரண்டாகிய, கும்பம் - குடம் போன்ற, மெல் - மெல்லிய, முலையார் - தனங்களை யுடைய பெண்கள், இச்சை - ஆசையானது, விஞ்சி - அதிகரித்து, தாமே - அவர்களே, அணைகின்றது - வலிந்து தழுவிப் புணர்வதால் வரும் இன்பமே, இன்பத்து - காம இன்பத்துக்கு, அணி - அலங்காரமாகும். (எ - று.)

க - து :—ஆண்மக்களைப் பெண்மக்களே வலிதில் தழுவிக் கொடுக்கும் இன்பமே உயர்ந்த இன்பமாகும் என்பதாம். எனவே, சிவ முயற்சியின்றித் திருவருட் சத்தி உண்டாவது தெய்வீகம் என்னும் குறிப்புப் பொருள் தோன்ற நிற்பது காண்க. கOO

**உண்ணொருவனை மற்றோர் உயிருய்வான் மாற்றல்
தணவாரே உண்மைத் தவர்.**

ப - ரை:—உண் - உணவு கொள்ளுகின்ற, ஒருவனை - ஒருமனிதனைப் புசித்தலில் நின்றும்

விலக்குவது பாவமே ஆயினும், மற்று ஓர் உயிர் - வேறு ஒரு உயிரானது, உய்வான் - உயிர்பெற்று உய்யும் நிமித்தம், மாற்றல் - விலக்குதலை, உண்மைத் தவர் - உண்மைத்தவசிகள், தணவார் - நீக்கவே மாட்டார்கள்.

(எ - று.)

க - து :—உணவை உண்பவனை விலக்குவது பாவமாயினும், மற்றோர் உயிர் அவனைச் சீவிக்கும் சமயம் நேரிடுமாயின், சீவகருணையுடைய பெரியோர்கள், அவனை அப்புசிப்பில் நின்றும் விலக்கி அவ்வுயிரைக் காப்பார் என்பதாம். ௧௦௧

**உணோம்படிசொற் றேனும் உணர்வுறுத்து வார்நீர்**
**திணோங்கலின்மே லென்கை திறம்.**

ப - ரை:—உள் - கேட்போருடைய மனம், நோம்படி - வருந்தும்படி, சொற்றேனும் - சொல்லியாவது, உணர்வு - நல்லறிவை, உறுத்துவார் - அவர்களிடத்து வரும்படி செய்வோருடைய, நீர் - தன்மை, திண் - திட்பத்தையுடைய, ஓங்கலின் - மலையினும், மேல் என்கை - உயர்ச்சி என்பது, திறம் - உறுதியாம்.

(எ - று.)

க - து :—மனம் வருந்தச் சொல்லியாவது கேட்போருக்கு அறிவுநிலை பெறும்படி செய்வாரது தன்மை மலையினும் பெரிது என்பதாம். ௧௦௨

**இளைகாரத் திற்புணர்ந்தாங் கீடேற்றம் வேண்டா**
**உணவளவிற் றுய்ப்பார் உளர்.** :து)

ப - ரை:—இன் - னகர ஒற்றனது, ஔகாரத்தில் - ஔ என்னும் உயிருடன், புணர்ந்தாங்கு - சேர்ந்தாற்போல, ஈடேற்றம் - ஈடேறுதற்குக் காரணமாகிய தானதருமங்களைச் செய்ய, வேண்டாது - விரும்பாமல், உணவு அளவில் - அருந்தல், பொருந்தல் ஆகிய போகம் மாத்திரம், துய்ப்பார் அநுபவிப்பவர், உளர் - இவ்வுலகத்தில் பலர் இருக்கின்றார்கள். (எ - று.)

க - து:—ஙௌ. எழுத்து வரிசையிலிருந்தும் எப்பயனுமில்லாததுபோல, அறச் செயல்களைச் சற்றும் விரும்பாமல் அருந்தல் பொருந்தல்களையே விரும்பிப் பயனின்றி வாழ்பவர் இவ்வலகத்தில் பலர் உளர் என்பதாம். ௭0௩

---

## தகர வருக்கம்

தந்தை பெறும்புகழைத் தம்புகழ்ச்சி யால்மறைக்
விந்தையுற்றார் மானிடரில் மேல். ௫௰

ப - ரை:—தந்தை - தகப்பனால், பெறும் - பெறப்பட்ட, புகழை - கீர்த்தியை, தம் - தம்முடைய, புகழ்ச்சியால் - பெருங்கீர்த்தியினால், மறைக்கும் - மறைக்கின்ற, விந்தை உற்றார் - ஆச்சரியச்செய்கைகளை உடைய புத்திரர்கள், மானிடரில் - மனிதர்களுக்குள், மேல் - உயர்ந்தவர்களாவர். (எ - று.)

க - து:—தம்புகழைக் கொண்டு தமது தந்தையினது புகழை மூடிவிடும் நற்புத்திரர்களே மேன்மக்களாவர் என்பதாம். ௧௦௭

**தானம் வெறுப்பார் தவந்திற் குவமையெண்ணில்**
**மானம் இழந்த மகள்.**

ப - ரை:—எண்ணில் - நன்கு ஆராயுமிடத்து, தானம் - தருமத்தின் கண், வெறுப்பார் - சற்றும் விருப்பமில்லாத தவசிகளது, தவத்திற்கு - தவத்தினுக்கு, மானம் - கற்புநிலையை, இழந்த - கைவிட்ட, மகள் - பெண்ணே, உவமை - உவமானம் ஆவாள்.

க - து:—தானத்திலுள்ள அபிமானத்தை விட்டவரது தவமானது, மானத்தைக் கைவிட்ட மங்கையை ஒக்கும் என்பதாம். ௧௦௮

**திங்கட் குடையானும் தெய்வமன்றி யின்றென்பார்**
**தங்கட்கே வீடும் தகும்.**

ப - ரை:—திங்கட் குடையானும் - சந்திரனைத் தனக்குக் குடையாகக் கொண்ட மன்மதனும், தெய்வம் அன்றி - கடவுளுக்கு அன்னியமாய், இன்று என்பார் தங்கட்கே - இல்லையென்னும் உணர்வுடையோர்க்கே, வீடும் - முத்தி அடைதலும், தகும் - தகுதியாகும். (எ - று)

க - து:—மன்மதனையும் கடவுளுக்கு அன்னியமின்றிக் காண்போர்க்கே பந்த நீக்கம் உண்டாகும் என்பதாம். ௧௦௯

**தீயிற் கொடுஞ்சொற் றினம்பேசு வார்பலரும்
நாயிற் கடையாம் நரர்.**

ப - ரை:—தீயில் - நெருப்பைப் ஒத்த, கொடும் சொல் - கொடிய சொற்களை, தினம் - நாள்தோறும், பேசுவார் - சொல்லுகிறவர், பலரும் - யாவரும், நாயில் - நாயைப் பார்க்கினும், கடைஆம் - கீழ்ப்பட்ட, நரர் - மனிதர்கள் ஆவர். (எ - று.)

க - து:—தயை சற்றும் இன்றித் தீயை ஒத்த சொற்களையே யாவரித்துஞ் சொல்லும் மனிதர்கள் நாயினும் கடையாவார் என்பதாம். கO எ

**துன்பம் பலவரினுந் தொட்டநிலை விட்டிழியார்
இன்ப மிகப்பெறுவா ரே.**

ப - ரை:—துன்பம் - இடையூறுகள், பல - அநேக விதமாக, வரினும் - ஒருமித்து வந்தாலும், தொட்ட - தாம் அநுட்டிக்கத் தொடங்கிய, நிலை - நன்னிலையை, விட்டு இழியார் - விட்டு நீங்காதவர், இன்பம் - இன்பத்தை, மிக - அதிகமாக, பெறுவார் - அடைவார். (எ - று)

க - து:—ஓர் நன்னிலையை அநுட்டிப்பவர் எவ்விதத் துன்பங்களுக்கும் அஞ்சாமல் அநுட்டிப்பாராயின், முடிவில் பேரின்பத்தை அநுபவிப்பார் என்பதாம். கO அ

தூங்காது தூங்கித் தொடுகுறியில் நிற்போர்க்கே
ஏங்கா துவக்கும் இயல்பு.

ப - ரை:—தூங்காது - நித்திராவத்தையி லும் சென்று விடாமல், தூங்கி - சாக்கிர அவத்தையிலும் நில்லாமல், தொடு - தாம் குறித்த, குறியில் - இலட்சியத்தில், நிற்போர்க்கே - அசைவறத் துரியாவத்தையில் நிற்பவருக்கே, ஏங்காது - அச்சம் அற, உவக்கும் - மகிழும், இயல்பு - தன்மை உண்டாகும். (எ - று)

க - து :—மூர்த்தித் தியானத்திலே மனத்தை நிறுத்திய தீரர்களே சகல இன்பத்தையும் அடைவார்கள் என்பதாம். ௧0௯

தெள்ளிய நூலினத்துட் சீரியதூன் தின்னுதல்
வள்ளிமைஎன் றேது வது.

ப - ரை:—தெள்ளிய - ஆராயப்பட்ட, நூல் இனத்துள் - நூல்களுக்குள், சீரியது - சிறப்புள்ள நூலானது, ஊன் - புலாலை, தின்னுதல் - தின்னுமையே, வள்ளிமை - சகல நற்பயன்களையும் தரவல்ல புண்ணியம், என்று - என்பதாக ஓதுவது - போதிப்பதேயாகும். (எ - று)

க - து :—புலால் உண்ணாமையே பெரும் புண்ணியம் என்று சாதித்துக் கூறும் நூலே சிறந்த நூல் என்பதாம். ௧௧0

தேவர் புளியில்வரச் சிந்திக்கு மாறுணரார்
பாவலவ ரேனும் பதர்.

ப - ரை:—தேவர் - தேவர்கள் எல்லாம், புவியில் - பூலோகத்தில், வர - வந்து பிறக்கும் பொருட்டு, சிந்திக்கும் ஆறு - விருப்பம் கொண்டிருக்கும் விதத்தை, உணரார் - அறிந்துகொள்ள மாட்டாதவர், பாவலவரேனும் - பெரும்புலவர்களாயிருந்த போதிலும், பதர் - பதருக்கு ஒப்பாவார். (எ - று)

க - து:—மனிதப் பிறப்பையே சதா விரும்பிக் கொண்டிருக்கிற தேவர்கள் இயல்பை உணராதவர் பதருக்கு ஒப்பாவார் என்பதாம். கசக

தைக்கக் கணைதெறிப்பான் றன்னைவிட்டு வில்லையெள்ளும்
மக்களதே மூட மதி.

ப - ரை:—மூட மதி - மூடபுத்தியானது, தைக்க - தேகத்தில் தைக்கும்படி, கணை - பாணத்தை, தெறிப்பான் தன்னை - எய்கின்றவனை, விட்டு - நிந்தியாது விட்டு, வில்லை - அவன் கை வில்லினை, எள்ளும் - நிந்திக்கும், மக்களதே - மக்களுடையதேயாகும். (எ - று)

க - து:—மூடமதியானது பாணம் எய்தவனைவிட்டு அவன் வில்லினைநிந்திக்கும் தன்மையையுடைய மனிதர்களிடத்ததே யாகும் என்பதாம். கசஉ

தொண்டுபுரிந் தீசன் துதிபுகல மாட்டாதார்
கண்டுகொள்வ தில்லை கதி.

ப - ரை:—ஈசன் - எல்லாம் வல்ல இறைவனை, தொண்டு புரிந்து - தியானபூசைகளால்

வழிபட்டு, துதி - அவ் இறைவனுடைய தோத்திரங்களை, புகல மாட்டாதார் - பாடித் துதி செய்யாதவர்கள், கதி - முத்திப்பேற்றை, கண்டு - உள்ளபடி உணர்ந்து, கொள்வது - இல்லை - அடைவது இல்லையாகும். (எ - று)

க - து :—இறைவனுக்கு மெய்யடிமையாகி அவ் இறைவனது மகிமைகளைத் துதிக்காதவர் கதி அடைய மாட்டார்கள் என்பதாம். கசு.

தோலாத வீரர் தொழுந்தாள் உடைத்தவரால்
ஏலாத வாறென் றிலை.

ப - ரை:—தோலாத - பகைவரால் தோல்வி அடையாத, வீரர் - சௌரியமுள்ள அரசர்களும், தொழும் - வணங்கத் தக்க, தாள் உடை - திருவடிகளை உடைய, தவரால் - தவசிகளால், ஏலாதவாறு - இயலாத காரியம் ஒன்று - யாதொன்றும், இலை - இல்லையாம். (எ - று)

க - து :—தவசிகளால் செய்து முடிக்கத் தகாத பெருங் காரியம் யாதொன்றும் இல்லை என்பதாம். ககஏ

தெளவை சினியோர் சரதந் தவந்தருமம்
கௌவையெனு நீத்தார்களே.

ப - ரை:—சரதம் - சத்தியமும், தவம் - தவமும், தருமம் - புண்ணியமும், கௌவையெனு - துன்பம் தருபவை களென்று, நீத்தார்களே -

கைவிட்டவர்களே, தௌவைக்கு - மூதேவிக்கு, இனியார் - நல்லவர்களென்று சொல்லப்படுவார். (எ - று).

க - து :—சத்தியம் முதலிய நன்மைகளை வெறுத்துக் கைவிட்டவர்களே மூதேவிக்கு நல்லவர் என்பதாம். கக௯

---

## நகர வருக்கம்

**நங்கையரிற் கற்பினர்க்கே நானிலத்தும் மேனிலத்தும்**
**சங்கையற்ற மேன்மை தகும்.**

ப - ரை:—நங்கையரில் - பெண்களுக்குள், கற்பினர்க்கே - கற்புத்தன்மை உடையவர்க்கே, நானிலத்தும் - பூலோகத்தினிடத்தும், மேனிலத்தும் தேவலோகத்தினிடத்தும், சங்கையற்ற அளவிறந்த, மேன்மை - மேம்பாடு உண்டாகும் என்பது, தகும் - தகுதியாகும். (எ - று)

க - து :—பெண்களுக்குள்ளே பதிவிரதைகளுக்கு மாத்திரமே எவ்வுலகத்திலும் பெருஞ்சிறப்புண்டா மென்பது சத்திய மென்பதாம். கஉ0

**நாரியருங் கற்கை நலமென் றுரைக்குநரைப்**
**பாரில் இகழ்வார் பலர்.**

ப - ரை:—நாரியரும் - பெண்களும், கற்கை - கல்விப் பயிற்சி உடையவராயிருத்தல், நல

மென்று - நன்மை என்று, உரைக்குநரை - சொல்லும் அறிவுடையோரை, இகழ்வார் - நிந்திக்கும் மூடர்கள், பாரில் - இப்பூமியில், பலர் - அநேகருளர். (எ - று.)

க - து :—பெண் கல்வியை நிந்திக்கும் மூடர்கள் இவ்வுலகத்தில் அநேகரென்பதாம். ௬௬௭

**நித்தன் அருட்கடலின் நேயம்வரக் கற்றவர்தாம்**
**எத்தகவோ ரேனும்வல்லோ ரே.**

ப - ரை:—நித்தன் - நித்தியத் தன்மையையுடைய இறைவனது, அருட்கடலில் - அளவுபடாத அருளினிடத்து, நேயம் - அதிகப் பிரீயம், வர - தமக்கு உண்டாகும்படி, கற்றவர் தாம் - கற்றுணர்ந்தவர்கள், எத்தகவோரேனும் - எவ்விதத் தாழ்ச்சி உடையவராயினும், வல்லோரே - வல்லவர்களே யாவர். (எ - று)

க - து :—திருவருட் சத்தியாலுண்டாகும் சித்திகளிடத்துத் தங்களுக்குப் பிரியமுண்டாகும்படி கற்றுணர்ந்தவர்களே மேலோர் என்பதாம். ௬௬௮

**நீதி மறந்து நெடுநீர்ப் புவிபுரப்பான்**
**தீதினத்தின் மேலாம் திறம்.**

ப - ரை:—நீதி - நடுவு நிலைமையாகிய நீதியை, மறந்து - மறந்தவனாய், நெடுநீர் - கடலாற் சூழப்பட்ட, புவி - பூமியை, புரப்பான் - ஆள்

-ளை செய்பவனது, தீது - கொடுமையானது, இனத்தின் - தீமைக் கூட்டங்களுக்குள், மேலாம் - முதன்மை யுடையதாம் என்பது, திறம் - உறுதியாகும். (எ - று)

க - து :—கொடுங்கோல் அரசனுடைய தீமையே தீமைகளுக்குள் சிறந்தது என்பதாம், கககூ

நுண்ணிய மேலோர் நுவல்கின்ற நூல்வழிசெய்
புண்ணியமே வண்மைப் பொருள்.

ப - ரை:—நுண்ணிய - நுட்பமான அறிவினையுடைய, மேலோர் - பெரியோர்களால் செய்யப்பட்ட, நூல் - சாத்திரங்கள், நுவல்கின்ற - சொல்லுகின்ற, வழி - நெறியின்படி, செய் - செய்யும், புண்ணியமே - தருமமே, வண்மைப் பொருள் - எல்லாப் பயனையும் தரும் உண்மைப் பொருளாம். (எ - று).

க - து :—நன்மை தீமைகளை உள்ளபடியே பகுத்துணர்ந்த பெரியோர்களால் கூறப்பட்ட நூல்களின் விதிப்படி செய்யும் புண்ணியமே எல்லா நன்மைகளையும் தரும் என்பதாம் கஉO

நாலிழந்தும் கேளியிச்சை நாருதாள் மற்றொருவன்
தாலிகட்டிக் கொள்ளத் தரும்.

ப - ரை:—நால் - தன் நாயகன் பூட்டிய மங்கல நாணைது, இழந்தும் - நீங்கிய பின்னும், கேளியிச்சை - புணர்ச்சியின் அவாவை,

னாரு தாள் - வெறுக்கச் சக்தியில்லாத பெண், மற்றொருவன் - வேறொரு நாயகனால் அணியப் படும், தாலி - மங்கலநாணை, கட்டிக்கொள்ளல் - தரித்துக்கொள்ளுதல், தரும் - தகுதியாகும். (எ - று).

க - து :—காம இன்பத்தில் அதிக இச்சையுடையவ ளாகில், சைவப் பெண்ணும் வேறொரு நாயகனை மணம் செய்து கொள்வதே நன்மை என்பதாம். ௬௨௪

நெல்லிக் கனியில் நிறையருட்சீர் கைவரு முன்
புல்லினர்போற் பேசல்தரும் புண்.

ப - ரை :—நிறை - பரிபூரணமாகிய, அருட் சீர் - திருவருட் செல்வமானது, நெல்லிக் கனியில் - உள்ளங்கையின் நெல்லிக்கனியைப் போல, கைவருமுன் - சித்திப்பதற்கு முன்னரே, புல்லினர் போல் - அச் செல்வத்தைப் பெற்றவர்கள் போல், பேசல் - பிறர் அறியக் கூறுதல், புண் - பெருந்துயரத்தை, தரும் - கொடுக்கும். (எ - று).

க - து :—திருவருட்பேறு பெறு முன்னர், அதனைப் பெற்ற மெஞ்ஞானிகளைப் போற் பேசுவது பெருந்துன்பந் தரும் என்பதாம்.

நேடிப் பரவுமன்பர் நெஞ்சத்துட் சென்றிறைவன்
ஆடித் திகழ்வதுமெய் யாம்.

ப - ரை :—இறைவன் - உலக முதல்வனான கடவுள், நேடி - தனது இலக்கணத்தை உள்ள

படி விசாரித்துணர்ந்து, பரவும் - தோத்திரஞ் செய்யும், அன்பர் - தொண்டர்களுடைய, நெஞ்சத்துள் - மனத்தினிடத்து, சென்று - பல வித உருவங் கொண்டெழுந்தருளி, ஆடி - விளையாடி, நிகழ்வது - விளங்குவது, மெய்யாம் - உண்மையாகும். (எ - று).

க - து:—இறைவன், உள்ளபடி வழிபடும் மெய்யன்பரது மனவெளியில் தோன்றித் திருவிளையாடல் செய்வது உண்மையாகும் என்பதாம் கஉரு

**நையாது நைந்து நலம் வேண்டும் மெய்யடியார்**
**ஓய்யாரம் பிற்றோன் றும்.**

ப - ரை:—நையாது - வருந்தாமல், நைந்து - வருந்தி, நலம் - நன்மையை, வேண்டும் - அடைய விரும்பும், மெய் - உண்மையன்புடைய, அடியார் - தொண்டரது, ஓய்யாரம் - கம்பீரச் செய்கையானது, பின்தோன்றும் - முதலில் தோன்றாதிருப்பினும் அருள் பெற்ற பின்பு தோன்றும். (எ - று).

க - து:—தெய்வ உபாசனையுடைய மெய்யன்பரது மகிமையானது தொடக்கத்தில் விளங்காதிருந்து, பின்பு, நன்றாக யாவருக்கும் விளங்குமென்பதாம் கஉசு

**நொந்து பரதவித்து நோலாற் கொழியாதே**
**வந்து பிறக்கும் வழி.**

ப - ரை:—நொந்து - பிறவித் துயரால் தளர்வடைந்து, பரதவித்து - கொலை முதலிய

வற்றால் உயிர்கள் படுந்துயரங்களைச் சகியாமை பற்றிப் பரதவித்து, நோலாற்கு - தவஞ் செய்யாதவனுக்கு, வந்து - ஒரு தாய் வயிற்றை அடைந்து, பிறக்கும்வழி - பிறக்கும் முறைமை, ஒழியாதே - நீங்கவே மாட்டாது. (எ - று.)

க - து:—அருட்சித்தி விருப்பமும் சீவகருணையும் இல்லாத தவசிக்குப் பிறவிப்பிணி நீங்காது என்பதாம். கஉகூ

நோன்பென்கை கொன்று நுகராமை என்றுரைத்தாள்
தான்பெண் இனத்தின் தலை.

ப - ரை:—நோன்பு என்கை - தவம் என்று சொல்லப்படுவது, கொன்று - ஒருயிரைக் கொலை செய்து, நுகராமை - அதன் ஊனைத் தின்னாமையாம், என்று - என்பதாய், உரைத்தாள் தான் - சொல்லிய ஔவையாரே, பெண்ணினத்தின் பெண்கள் கூட்டத்தில், தலை - உயர்ந்தவள். (எ - று).

க - து:—நோன்பு என்பது கொன்று தின்னாமை என்று கூறிய ஔவையாரே பெண்களில் சிறப்புடையாளென்பதாம். (கஉ௲)

நௌவி விழியார் நலஞ்சிறிதும் நாட்டாத
செவ்வியநூற் பாஇனியா தே.

ப - ரை:—நௌவி - மான் போன்ற, விழியார் - கண்களை உடைய மங்கையரது, நலம் - அழகினை, சிறிதும் - கொஞ்சம் கூட, நாட்

டாத - எடுத்துக் கூறாத, செவ்விய - செம்மையான, நூற்பா - செய்யுட்களையுடைய நூலாயினும், இனியாதே - இனிமையைக் கொடாது. (எ - று).

க - து :—சிற்றின்பச்சுவை கொஞ்சமும் இல்லாத நூல் வாசிப்பவருக்கும் கேட்பவருக்கும் இனிமையைக் கொடாது என்பதாம். கஎ

## பகர வருக்கம்

பத்தி வலையிற் பரன்படுமா றோர்ந்தாரே
சித்திமுத்தி யெய்தும் சிலர்.

ப - ரை :—சித்திமுத்தி - சித்திமுத்தி எனு னும் இரண்டையும், எய்தும் - அடைகின்ற, சிலர் - அரிய தவசிகள் யாரெனில், பத்தி வலையில் - பத்தி என்னும் வலையினிடத்து, பரன் - ஜெகதீசுவரன், படுமாறு - அகப்படும் விதத்தை, ஓர்ந்தாரே - நன்குணர்ந்தவர்களே யாம். (எ - று).

க - து :—பழுதற்ற பத்திமார்க்கத்தில் நின்று இறைவனைக் கண்டு சித்திமுத்திகளை அடைபவர்கள் சிலதவசிகளே என்பதாம். கஉஅ

பாக மதுரப் பனுவல்பகர் பாவலவர்
சீகரநீர்ப் பாரிற் சிலர்.

ப - ரை:—பாகம் - பக்குவமும், மதுரம் - மிகுந்த சுவையும் பொருந்த, பனுவல் - நூல்களை, பகர் - இயற்றும், பாவலவர் - புலவர்கள், சீகரம் - அலைகளையுடைய, நீர் - கடலாற் சூழப்பட்ட, பாரில் - பூமியின்கண், சிலர் - சிலருளர். (எ - று.)

க - து :—பொருத்தமும் இனிமையும் அமையும்படி நூல்களை இயற்றும் புலவர்கள் இவ்வுலகில் சிலரேயாவர் என்பதாம். கஉக

**பின்னமுற முன்னவனைப் பேசும் பிழையுடையார்
என்ன பயனடைவா ரே.**

ப - ரை:—பின்னம் - வேறுபாடானது, உற - பொருந்தும் படியாக, முன்னவனை - இறைவனை, பேசும் - நிந்தித்துப் பேசும், பிழையுடையார் - குற்றமுடைய மதவாதிகள், என்ன பயன் - எவ்விதப்பயனை, அடைவார் - பெறுவார்கள்? (எ - று).

க - து :—முதல்வனாகிய இறைவனது உண்மையை உணராமல் ஒருவருக்கொருவர் பகைகொண்டு அவ் இறைவனையே நிந்தித்துக் கூறும் சமயவாதிகள் என்ன பயனைப் பெறுவார்கள் ?என்பதாம். கஙO

**பிழைக்குள் அஞ்சிப் பெருங்களிப்பிற் கிச்சை கொள்ளா
ஏழைக்கு வீடும் இலை.**

ப - ரை:—பிழைக்கு - தனக்கு நேரிடும் துன்பங்களுக்கு, உள் அஞ்சி - மனதுள் பயம் அடைந்து, பெருங்களிப் பிற்கு - பெருமகிழ்ச்சி அடைதற்கு, இச்சை கொள்ளா - அருளைப் பெற விருப்பம் கொள்ளாத, ஏழைக்கு - மன வுறுதியற்ற ஒருவனுக்கு, வீடும் - பந்த நீக்கமும், இல்லை - உண்டாகாது. (எ - று.)

கருத்து :—துன்பங்களுக்கு மிகவும் பயந்து திரு அருட் சித்தியைப் பெற விரும்பாத தவசிக்கு முத்தியும் உண்டாகாது என்பதாம். கஙக

**புற்கறிப்பால் நீடும் புலாலும் புசிக்கும்அவர்**
**அற்கைவிழை வாரெம் மவர்.**

ப - ரை;—புல்-புற்களை, கறிப்பால் - மேய்வதனல், நீடும் - விருத்தியாகும், புலாலும் - உயிர்களின் மாமிசத்தையும், புசிக்கும் அவர் - தின்னுகிறவர்கள் யாவரும், அற்கை - நசிக்கும் விதத்தை, விழைவார் - இச்சித்து ஆராய்பவர், எம்மவர் - எம்முடைய உறவினர்களாவார்.

(எ - று)

க - து :—புற்களைத்தின்று வாழும் உயிர்களையும் கொன்றுண்ணும் கொடியவர்களது அழிவை விரும்புவோர் யாவரும் எம் உறவினராவார் என்பதாம். கஙஉ

**பூனைக்குள் ஒல்கிப் புலிநாமென் றேதுமவர்**
**வானைத் துறந்தவர்போல் வார்.**

ப - ரை:—பூனைக்கு - பூனைக்கு ஒப்பாகிய அற்பர்களுக்கும், உள்ஒல்கி - மனக் கலக்கம் அடைபவராகி, புலி நாமென்று - வீரத் தன்மையுடைய தவசிகளே நாமும் என்று, ஓதுமவர் - வாயினாற் சொல்லிக்கொண்டு திரிபவர், வானை - வானுலக இன்பத்தை, துறந்தவர் - வெறுத்த மெய்ஞ்ஞானிகளை, போல்வார் - ஒப்பவராவார், (மெய்ஞ்ஞானிகளாகார்.) (எ - று)

க - து :—அற்பச் செல்வர்களுக்கும் பயந்து மனத்தளர்வடையும் தவசிகள், மேலாகிய செல்வத்தையுடைய அரசர்களும் வணங்கத்தக்க மெய்ஞானிகளாகத் தங்களை மதித்துக் கொண்டு உழல்பவர்கள் என்பதாம் கூ௫

பெற்ற தொளித்துப் பெருதாரிற் பேசுநரை
நற்றரைமின் கண்டு நகும்.

ப - ரை:—பெற்றது - தாம் பெற்ற திருஅருட்பேற்றை, ஒளித்து - பிறர்க்குத் தோன்ருது மறைத்து, பெருதாரில் - அதனைப் பெருதவரைப் போல், பேசு நரை - பேசும் தொழிலுடையவரை, நல் - நன்மை பொருந்திய, தரைமின் - பூமி தேவியானவள், கண்டு - பார்த்து, நகும் - சிரிப்பாள். (எ - று)

க - து :—அருட்சித்தியைப் பெற்ருேர்கள் பெருதவர் போற் காட்டுவது இயல்பு. ஆயினும், உயிர்களுக்கு இடுக்

களுற்றபோதும் உதவி செய்யாதிருப்பாராயின் அவர்களைப் பூமி தேவி கண்டு சிரிப்பாள் என்பதாம். ௧௩௪

**பேசாத ஞானநிலை பெற்றும் பிரான்அருளால்**
**ஆசானுத் தோன்றுநருண் டால்.**

ப - ரை:—பேசாத - சொல்ல முடியாத, ஞானநிலை - மெய்ஞ்ஞான நிலைமையை, (சமரச நிச்சயத்தை) பெற்றும் - தாம் அடைந்திருந்தும், பிரான் அருளால் - இறைவன் திருவுள்ளப் படி, ஆசான் - ஒரு சமயத்திற்குத் தலைவராகி, தோன்றுநர் - விளங்குகிறவர்களும், உண்டு - உண்டு. (எ - று)

க - து :—மௌன நிலையைப் பெற்ற உண்மை ஞானி களும் இறைவன் சம்மதத்தினுல் ஒரு மதத்தலைவர்களாக விளங்குவதும் உண்டென்பதாம். ௧௩௫

**பையன்ன அல்குற் பரவை அனையாரால்**
**மெய்யருளார் மேற்பொரும்வில் வேள்.**

ப - ரை:—பையன்ன - பாம்பின் படத்தை ஒத்த, அல்குல் - உறுப்பினையுடைய, பரவை - பரவை நாச்சியாரை, அனையாரால் - ஒத்தமங் கையர் பொருட்டு, மெய் - உண்மையாகிய, அரு ளார் மேல் - திரு அருட் பேற்றைப் பெற்ற மெய்ஞ் ஞானிகள் பேரிலும், வில் - கருப்பு வில்லையுடைய, வேள் - மன்மதனுனவன், பொரும் - போர் செய்யத் தொடங்குவான். (எ - று)

க - து :—மன்மதனானவன் சில மங்கையரது புண்ணி யஉட காரணமாக மெய்ஞ்ஞானிகளுக்கும் மோகத்தை உண்டு பண்ணுவான் என்பதாம். ௧௯௬

**பொக்கத் துயர்ச்சி புலாலுடல்என் றோராதார்**
**எக்கலைச்சீர் ஆய்ந்திடினும் என்.**

ப - ரை;—புலால் - மாமிசச் சுமையாகிய, உடல் - சரீரமானது, பொக்கத்து - பொய்ப் பதார்த்தங்களுக்குள், உயர்ச்சி - சிறந்தது, என்று - என்பதாக, ஓராதார் - பகுத்தறியாத வர்கள், எக்கலை - எந்த நூல்களின், சீர் - சிறப் பியல்களை, ஆய்ந்திடினும் - கற்றறிந்தாரா யினும், என் - என்ன பயனை அடைவார்கள். (எ - று)

க - து :—உடலைப் போலப் பொய்ப் பொருள் வேறொன் றில்லை என்று உணராதவர்கள், பல நூல்களையும் நன்கு உணர்ந் தவராயினும் அவ்வுணர்ச்சியால் பயனில்லை என்பதாம். ௧௯௭

**போகமுத்தி என்ப பொருவிலருட் சத்திமுலை**
**ஆக லுணர்வார் அரிது.**

ப - ரை:—போகம் முத்தி என்ப - போகம் என்றும், மோட்சம் என்றும், சொல்லப்படும் இவ்விரண்டும், பொருவில் - சமான மில்லாத, அருட் சத்தி - திரு அருட் சத்தியினுடைய, முலையாகல் - இரண்டு கொங்கைகளாய் இருத் தலை, உணர்வார் - அறிந்து கொள்பவர், அரிது - அருமையாகும். (எ - று)

க - து :—இன்பமும், முத்தியும் ஆகிய இவ்விரண்டும் திரு அருட் சக்தியின் கொள்கைகளென்று உணர்ந்துகொள்பவா அரியர் என்பதாம். கரு௯

பௌவ நெடுந்தானைப் பார்மகிழ்ச்சி நாடுமவர்
தெவ்வர்வலிக் கஞ்சாச் சிலர்.

ப - ரை:—பௌவம் - கடலாகிய, நெடும் - நீண்ட, தானை - உடையை யுடுத்த, பார் - பூமி தேவியை, மகிழ்ச்சி - மகிழ்விக்கும் பொருட்டு, நாடுமவர் - அதற்கேற்ற வழிகளை ஆராய்பவர் யாவ ரென்னில், தெவ்வர் - பகைவர்களுடைய, வலிக்கு - ஆற்றலுக்கு, அஞ்சா - சற்றும் பயப் படாத, சிலர் - சில தவசிகளாகும். (எ - று)

க - து :—பூமிதேவியைச் சந்தோஷிப்பிக்கும் பொருட்டு அதற்குத் தக்கவைகளை யோசித்துச் செய்பவர் சில தவசிகளே யாவார் என்பதாம். கரு௧

## மகர வருக்கம்

மஞ்சன்ன கூந்தல் மடவார் புலவிகண்டுள்
அஞ்சல் புருடர்க் கணி.

ப - ரை:—மஞ்சு அன்ன - மேகம்போன்ற, கூந்தல் - கரிய கூந்தலையுடைய, மடவார் - பெண்களுக்கு, புலவி - ஊடலானது, கண்டு - இயல்பாயுள்ள செயலென்றறிந்து, உள் - மனத்தினிடத்து, அஞ்சல் - அச்சமுற்

ெருழுகுதல், புருடர்க்கு - ஆடவர்களுக்கு- அணி - அழகாகும். (எ - று)

க - து :—ஊடலானது பெண்களுக்கு இயல்பாயுள்ளது என்பதை நன்குணர்ந்து தக்கபடி அச்சம் பொருந்திய மனத்தோடு ஒழுகுதல் ஆண்மக்களுக்கு நற்செய்கையாகும் என்பதாம். கசo

**மாயை இறைவன் வலிக்கயலாம் என்றிகழும்**
**பேயை மதிக்கை பிழை.**

ப - ரை:—மாயை - மாயா சத்தியானது, இறைவன் - பரனுடைய, வலிக்கு - வல்லமைக்கு, அயலாம் என்று - வேறாகிய பொய்ப்பொருளென்று, இகழும் - நிந்தை செய்யும். பேயை - உண்மையுணர்வற்றவனை, மதிக்கை - மெய்யறிவுடையவனென்று மதிப்பது, பிழை - குற்றமாகும். (எ -று)

க - து :—இறைவனுடைய அருட் சத்திக்கு, மாயா சத்தியை வேறுபடுத்தி இகழ்வோரை மதிக்கலாகாதென்பதாம். கச 5

**மின்மினிபோய்ப் புள்ளரசை வென்றிடினும் மெய்த்த**
**கன்மநெறி யார்வெல்லார் காண். [வரைக்**

ப - ரை :—மின்மினி - மின்மினிப் பூச்சியானது, போய் - சென்றெதிர்த்து, புள் அரசை - கருடனை, வென்றிடினும் - செயித்துவிடுங்காலம் வந்தாலும், மெய்த்தவரை - உண்

மைத்தவசிகளை, கன்மநெறியார் - கன்ம வாதிகள், வெல்லார் - செயிக்கமாட்டார்கள், காண் - அறிவாயாக. (எ - று.)

க - து :—மெய்த் தவமுடையவர்களுக்கு ஒரு காலத்திலும் கன்மிகளால் வெற்றிக்குறைவு உண்டாகாது என்பதாம்.

கசஉ

**மீனனைய கண்ணார் விருப்பம் தணவாதார்**
**ஞானநிலை தேரில் நகை.**

ப - ரை :—மீன் அனைய - சேல்மீன்களைப் போன்ற, கண்ணார் - கண்களையுடைய மங்கையரிடத்து, விருப்பம் - தங்களுக்குள்ள ஆசையை - தணவாதார் - நீக்கமாட்டாதவர்களது, ஞானநிலை - ஞானத்தின் நிலைமையை, தேரின் - ஆராயுமிடத்து, நகை - நிந்தையாய் முடியும். (எ - று.)

க - து :—பெண்ணாசையை நீக்க மாட்டாதவரது ஞானம் பெரும் பழியை விளைக்கும் என்பதாம்.

கசங

**முக்கட் பயனாய மூவாச் சமரசச்சீர்**
**மக்கட்கும் எய்து வது.**

ப - ரை :—முக்கண் - மூன்றாகிய ஞானக் கண்களினது, பயனாய-முழுப் பிரயோசனமாகிய, மூவா - கெடாத, சமரசச் சீர் - சமரசத் தன்மையானது, மக்கட்கும் - மனிதர்களுக்கும், எய்துவது - கிடைக்கத்தக்கதாம். (எ - று.)

க - து :—வேதாந்த நிலை, சித்தாந்த நிலை, அவற்றின் தாயாகிய பொது நிலை என்னும் மூன்றுவித ஞானங்களையு முடைய சமரசத் தன்மையானது மனிதருக்கும் கிடைக்கத் தக்கதாகும் என்பதாம். கஅஅ

**முதறிஞன் என்பான் முருடத் தொழில் முதலாம்**
**கோதழிக்க வல்ல குரு.**

ப - ரை—முருடத்தொழில் - கொலைத் தொழிலே, முதலாம் - ஆதியாகிய, கோது - குற்றங்களை, அழிக்கவல்ல - யாவரிடத்தும் நிலை பெறுமவற் கெடுக்க வல்ல, குரு - ஆசிரியனே, முதறிஞன் - முதிர்ந்தபேறறிவுடையவன், என் பான் - என்று யாவராலும் சொல்லப்படு வான். (எ - று.)

க - து :—யாவரிடத்துமுள்ள கொடுஞ் செயல்களை மாற்றி ஆளவல்ல சற்குருவே முதிர்ந்த நல்லறிவுடையவன் என்று யாவராலும் புகழப்படுவான் என்பதாம். கஅகூ

**மெல்லினன்றி நாவினுக்கு வேண்டிரதம் தோன்று**
**சொல்லின் முயல்வே துணிவு. [தால்**

ப - ரை :—மெல்லின் அன்றி - ஒரு பொருளை வாயிலிட்டு மென்றால் அல்லது, நாவி னுக்கு - ஒருவருடைய நாவுக்கு, வேண்டு - விருப் பமாகிய, இரதம் - சுவையானது, தோன்று தால் - உண்டாகாதாகையால், சொல்லின் - எல்லாப் பயன்களையும் தரவல்லது எது என்று

ஆய்ந்து சொல்லுமிடத்து, முயல்வே - அவ்வல்லமையை உடையது முயற்சியே என்று சொல்வது, துணிவு - அறிவுடையோர் யாவருக்கும் துணிவேயாம். (எ - று.)

க - து :—சுவைத்தாலன்றி நாவினுக்குச் சுவை தோன்றாதது போல, முயற்சித்தாலன்றி அறம் முதலிய பயன்கள் சித்தியாது என்பதாம். கசசு

மேலைத் தவத்தை வியப்பவரும் வேணடளவிற்
சீலத் தவஞ்செய் திடார்.

ப - ரை :—மேலைத் தவத்தை - தாம் முற்பிறப்பில்செய்த தவத்தினை, வியப்பவரும் - புகழ்ந்து கொண்டாடுகிறவர்களும், வேண்டளவில் - தங்களால் இயன்றமாத்திரம், சீலம் - பரிசுத்தமாகிய, தவும் - தவத்தை, செய்திடார் - இப்பிறப்பிலும் செய்ய மாட்டார். (எ - று)

க — து :—அறிவற்றவர்கள் போன பிறப்பில் செய்த தவத்தை மட்டும் புகழ்வார்கள். இப்பிறப்பிலும் இயன்ற மாத்திரம் நல்ல தவத்தைச் செய்யார்கள் என்பதாம். கசஎ

மையும் கதிர்மதியும் வாயுஅங்கி நீரும் அஞ்சச்
செய்யும் தவமே சிறப்பு.

ப - ரை :—மையும் - மேகமும், கதிர் - சூரியனும், மதியும் - சந்திரனும், வாயு - காற்றும், அங்கி - அக்கினியும், நீரும் - தண்ணீரும், அஞ்ச - பின்னர் அஞ்சி ஏவல் செய்யும்படி,

செய்யும் - ஒருவர் செய்யத் தொடங்கிய, தவமே - தவந்தானே, சிறப்பு - உயர்வுடைய தாகும். (எ - று.)

க - து :—தவம் நிறைவேறிய பின்னர் மேகம் முதலிய வைகளும் அஞ்சி ஏவல் செய்யும் நிமித்தம் ஒருவர் தொடங்கிய தவமே சிறப்புடைய தென்பதாம். கசஅ

மொக்குள் அனைய முலையார் மயல்வலையின்
சிக்குவிடும் வாழ்வே சிவம்.

ப - ரை :—மொக்குள் - நீர்க்குமிழியை, அனைய - போன்ற, முலையார் - கொங்கைகளை உடைய மங்கையரால் உண்டாகும், மயல் - மயக்கமாகிய, வலையின் - வலையில் அகப்பட்டு உழல்கிற, சிக்கு - தடுமாற்றமானது, விடும் - முற்றும் நீங்கிய, வாழ்வே - வாழ்க்கையே, சிவம் - முத்தியாகும்.

கருத்து :—பெண்ணாசை நீங்கிய பெருவாழ்வே மோட்சம் ஆகும் என்பதாம். கசகூ

மோக்கமுட லோடருளின் மூழ்க லெனமொழிவார்
மருள்.

ப - ரை :—மோக்கம் - முத்தியானது, உடலோடு - தூலசரீரத்துடனே, அருளில் - அருட் கடலில், மூழ்கல் - அழுந்திமறைதலே, என - என்று, மொழிவார் - உரைப்பவரது, வாக்கதனாடு - வார்த்தைகளில், மருள் - மயக்கமானது, இல்லை - இராது. (எ - று.)

க - து :—நால உடலுடனே திருவருளில் ஒன்றுபடு உதே, உண்மை முத்தி, என்று கூறும் பெரியோரது வசனத்தின்கண் விபரீதம் இராதென்பதாம். கஞ0

மௌவல் அரும்பனைய வாணகையார் வஞ்சத்தால்
எவ்வமுற் றுளார்க்கெண் இலை.

ப - ரை :—மௌவல் - முல்லையினது, அரும்பனைய - அரும்புகளை ஒத்த, வாள் - ஒளி பொருந்திய, நகையார் - பற்களையுடைய பெண்களது, வஞ்சத்தால் - மோசச் செய்கைகளினால், எவ்வம் - துன்பத்தை, உற்றுளார்க்கு - அடைந்துள்ளவர்களுக்கு, எண் இலை - அளவில்லை. (எ - று.)

கருத்து :—பெண்களால் மோசம் போனவர்களுக்கு ஓர் அளவில்லை என்பதாம். கஞக

## யகர வருக்கம்

யக்கர்பிரான் போல்வார் எனினும் இயற்புலமை
மக்களள வில்லார் வலி.

ப - ரை :—யக்கர் - யட்சர்களுக்கு, பிரான் - தலைவனாகிய குபேரனை, போல்வார் - ஒத்த வாழ்க்கையர், எனினும் - என்றாலும், இயல் - தகுதியாகிய, புலமை - கல்வியறிவினையுடைய, மக்கள் - புலவர்களுக்கு, அளவு - சரியான,

வலி - வல்லமையை இல்லார் - இல்லாதவரா வார். (எ - று.)

கருத்து :—செல்வர்கள், வாழ்வில் குபேரனை ஒத்தவ்ரா ரெனினும், வல்லபத்தில் புலவர்களுக்கு இணையாகா ரென்ப தாம். கஞ௨

யாகக் கொலைபழியன் றென்றிசைப்பார் யாரெனி
ஏகத் துவமுணரா ரே. [னும்

ப - ரை :—யாகக்கொலை - வேள்வியினிடத் துச் செய்யும் கொலைத்தொழிலானது, பழி யன்று - நிந்தையாகாது, என்று - எனத் துணிந்து, இசைப்பார் - சொல்பவர், யாரெனி னும் - எவ்வகை மேம்பாடுடையாராயினும், அவர்கள், ஏகத்துவம் - சிவபர ஐக்கியமாகிய சத்திய முத்தியினது நிலையை, உணராரே - அறியாதவர்களே யாவர். (எ - று.)

க - து :—யாகக் கொலையை நன்கு மதித்துச் சொல்பவர் கள் எவ்வகை மேன்மையான அறிவுடையவராயினும் அவர்கள் உண்மை முத்தி நிலையை அறியாதவர்களே யாவார் என்பதாம். கஞ௩

இயிற்றலைபோற் கோடுமுகத் தேந்திழையார் மாலால்
செயிர்க்கடலுண் டாதல் திறம்.

ப - ரை:—இயில் - இ என்னும் எழுத்தின் கண், தலைபோல் - அதன் சிரமானது வளைந் திருப்பது போல், கோடும் - நாணத்தால் வளைந்

ப - ரை :—இ என் பொறி - இ என்னும் உயிரெழுத்தானது, பன்மூன்றும் ஒற்று - பதின் மூன்றுவது ஒற்றெழுத்தாகிய ல் என்பதோடு, ஏய் - பொருந்திய இல் என்னும் பதப் பொருளாகிய, சொல் - இல்லை என்னும் சொல்லை, நுவலாது - சொல்லாமல், ஈந்து - வறியவர்களுக்குக் கொடுத்து, உய் - உய்வாயாக, என் கை - என்று கூறுகிற வார்த்தை, பலநூல் - பல சாத்திரங்களும், உரை - ஒத்துக் கூறும் வார்த்தையாம். (எ - று.)

க - து :—இல்லை என்று சொல்லாமல் வறியவர்களுக்குக் கொடுத்து வாழும்படி, யாம் கூறும் வார்த்தை சகல சாத்திர சம்மதமானது என்பதாம். கூ௮

இயேயீயா மாறுசுழி ஈற்றிலிடல் போன்ற
பொய்யேய்நெறியில் நல்லோர் புகார்.

ப - ரை :—இயே - இ என்னும் குற்றுயிரே (குறில் எழுத்தே), ஈ ஆமாறு - ஈ என்னும் நெட்டுயிராகும்படி (நெடிலாக), சுழி - சுழியை, ஈற்றில் - இறுதியில், இடல் போன்ற - (ஈ என்றபடி) இட்டு வழங்குதல்போல ஒருவரால் இடையிற் கற்பிக்கப்பட்ட, பொய் - அசத்தியச் செயல், ஏய் - பொருந்திய, நெறியில் - மதங்களில், நல்லோர் - நன்மை பொருந்திய மேன்மக்கள், புகார் - செல்லமாட்டார். (எ - று.)

க - து :—இடையில் ஒருவராற் கற்பிக்கப்பட்ட குற்றம் பொருந்திய மதங்களில் நல்லோர் சேரமாட்டார் என்பதாம்.

கரு௯

**இயையா மனக்களிற்றோ டென்றும்போர் செய்து**
**தயையுறுத்து மாறே தவம்.**

ப - ரை:—இயையா - உடன்படாத, மனம் - மனம் என்று சொல்லப்பட்ட, களிற்றோடு - ஆண் யானை யோடு, என்றும் - எப்போதும், போர் செய்து - எதிர்த்துச் சண்டையிட்டு, தயை - சீவகாருண்யம் பதியும்படி, உறுத்து மாறே - வற்புறுத்தி மனத்திற்கு உணர்த்துவதே, தவம் - தவமாகும். (எ - று.)

க - து :—கொடிதாகிய மனத்தை எவ்விதத்தும் சீவ காருணிய வடிவமாக்குவதே தவமாகும் என்பதாம். கசுO

**உயொரு குரவன் உருநாட்டம் பற்றி**
**மெயொளி பெறல்நல் விதி.**

ப - ரை:—உய் - பந்தத்தில் நின்றும் உய்யப் பெற்ற, ஒரு - ஒப்பற்ற, குரவன் - ஆசிரியனது, உரு நாட்டம் - திருவுருவத்தியானத்தை, பற்றி - மனத்தால் இடைவிடாது செய்து, மெய் - உண்மையாகிய, ஒளி - ஞானத்தை, பெறல் - பெற்றுக் கொள்வது, நல்விதி - உதமப் பக்குவருக்கு நல்ல ஒழுக்கம் ஆம்.

க - து :—தத்துவ ஞானம் பெற்ற சற்குருவின் திரு உருவத்தைத் தியானித்து, பற்றுகளை ஒழித்துக்கொள்வதே பக்குவர்களது நற்செய்கையாகும் என்பதாம். கசுக

யோகம் பழுதென் றொருங்கு விடச்சொல்லின்
மாகமேற் பாயும் மனம்.

ப - ரை:—யோகம் - உருவத்தியானமானது, பழுது என்று - குற்றம் தருவதெனத் துணிந்து, ஒருங்கு - அத்தியானம், வழிபாடு முழுமையையும், விட - விடும்படி, சொல்லின் - போதித்தால், மனம் - மனமானது, மாகம் - ஆகாயத்திற்கு, மேல் - அப்புறத்திலும், பாயும் - தாவும். (எ - று).

க - து :—உருவத்தியானம் முழுமையும் ஒழித்துவிடின் மனமானது சற்றும் நிலை பெறுமல் விஷய இச்சையில் ஓடும் என்பதாம். கசுஉ

யௌவனத்தில் மாதவப்பேற் றிச்சைவரப் பெற்
மௌவலந்திண் டோட்கரிய மால் [றேனே

ப - ரை.—யௌவனத்தில் - இளமைப் பருவத்தில், மாதவப் பேற்று - மேலாகிய தவத்தின் பயன் என்னும் போக மோட்சங்களிடத்து, இச்சை - மிகுந்த விருப்பமானது, வர - வரும்படி, பெற்றேனே - பெற்றுக்கொண்டவனே, மௌவல் - வனமல்லிகை மாலையையும், அம் - அழகையும், திண் - வலிமையையும்

உள்ள, தோள் - புயத்தையுடைய, கரிய - நீல நிறம் பொருந்திய, மால் - விட்டுணு மூர்த்திக்கு ஒப்பாவான். (எ - று).

க - து :—இளமைப் பருவத்திற்றானே சித்தி முத்திகளிடத்தில் அதிதீவிர விருப்பமுடையவன் விட்டுணுமூர்த்திக்கு ஒப்பாவான் என்பதாம். கசுங

## ரகர வருக்கம்

**இரவுபகல் மாற்றவல்லா ரென்றாலுங் கொன்றுண்**
**கரவுடையா ராயிற் கடை.**

ப - ரை:—இ ர வு - இராக் காலத்தையும், பகல் - பகற் காலத்தையும், மாற்ற - ஒன்றை மற்றொன்றாகச் செய்யும், வல்லார் என்றாலும் - வல்லமையை உடையவராயினும், கொன்று - ஓருயிரைக் கொலை செய்து, உண் - அதன் புலாலைப் புசிக்கும், கரவு - வஞ்சகத்தை, உடையாராயின் - உடையவர்களாயிருப்பாரானால், கடை - அவர்கள் இழிந்தோர்களே யாவர். (எ - று).

க - து :—எல்லாச் சித்திகளும் கைவந்த ஞானிகளாயினும், கொலைத் தொழிலும் புலால் அருந்தலும் உடையவர்களாயின் அவர்கள் அஞ்ஞானிகளைப் பார்க்கிலும் இழிந்தவராவார் என்பதாம். கசுச

**இராசபயம் தெய்வபயம் என்னும் இரண்டும்
வராவுயிர்கொன் றுண்ணுதார் மாட்டு.**

ப - ரை:—இராச பயம் - அரசர்களால் உண்டாகும் அச்சமும், தெய்வ பயம் - சிறு தெய்வங்களால் உண்டாகும் அச்சமும், என்னும் - என்று சொல்லப்படுகிற, இரண்டும் - இருவகை அச்சங்களும், உயிர் - ஓர் உயிரையும், கொன்று - கொலை செய்து, உண்ணுதார் மாட்டு - அதன் மாமிசத்தைப் புசியாதவரிடத்து, வரா - உண்டாகா. (எ - று).

க - து:—கொலைத் தொழிலையும், புலால் உண்ணலையும் நீக்கினவர்களுக்கு எவ்வித அச்சமும் இல்லை என்பதாம். கசுஙி

**இரியா மனமுடையார்க் கெய்தாத தில்லை
அரியார் உலகி னகத்து.**

ப - ரை:—அரி - கடலால், ஆர் - சூழப்பட்ட, உலகின் அகத்து - பூவுலகத்தினிடத்து, இரியா - சேதமடையாத, மனம் உடையார்க்கு - மனத்தினை உடைய நல்லோர்க்கு, எய்தாதது - கிடைத்தற்கரிய பொருள், இல்லை - யாதொன்றும் இல்லை. (எ - று).

க-து:—திடசித்தமுடைய நல்லோருக்குக் கிடைத்தற்கு அரிய பொருள் யாதொன்றும் இல்லை என்பதாம்.

**ஈர்ங்கோட்டு வேழநிகர் ஏந்திழையார்த் தாழ்வார்**
**சரீரம் பொறையாம் தரைக்கு.**

ப - ரை :—இரு - இரண்டாகிய, ஈர்ங் கோட்டு - குளிர்ந்த கொம்புகளையுடைய, வேழம் - யானையை, நிகர் - ஒப்பாகிய, ஏந் திழையார் - பெண்களைத் தலைமையாக்கி, தாழ் வார் - தாம் அவர்க்குத் தாழ்ந்து ஒழுகும் ஆட வருடைய, சரீரம்-உடல்கள், தரைக்கு-பூமிக்கு, பொறையாம் - பாரமாகும். (எ - று.)

க - து :—பெண்களுக்குப் பயந்தவராய் அவருக்குக் கீழ்ப் பட்டொழுகும் மனிதர்கள் பூமிக்குப் பெரும் பாரமாவார் என்ப தாம். கசுஎ

**உருவும் அருவும் ஒருபொருட்கே ஓதார்**
**மருவும் உணர்ச்சி மயல்.**

ப - ரை :—உருவும் - சகுணவடிவும், அரு வும் - நிர்க்குணத் தன்மையும், ஒருபொருட்கே- இறைவன் ஒருவனுக்கே உண்டென்று, ஓதார்- சொல்லாதவர்கள், மருவும் - அடைந்துள்ள, உணர்ச்சி - ஞானமானது, மயல் - மயக்க முடையதாம். (எ - று.)

க - து :—இறைவன் ஒருவனே சகள வடிவத்தையும், நிட்கள வடிவத்தையும் ஒருங்கு உடையான் என்று உணராத வரது ஞானம், அஞ்ஞானமாகும் என்பதாம். கசுஅ

**உரூஉக் கொடுவாளால் ஓச்சினரோய்ந் தொல்கி**
**வெரூஉப் பணியநிற்கை மேல்.**

ப - ரை :—உருஉ - உறையினின்றும் உருவிக் கொண்டு, கொடு - வளைவு பொருந்திய, வாளால் - வாளாயுதத்தினால், ஓச்சினர் - வீசிச் சரீரத்தை வெட்டப்புகுந்த வீரர்களும், ஓய்ந்து - கைசோர்ந்து, ஒல்கி - மனம் நாணி, வெருஉ - அச்சத்தால் வாய் வெருவி, பணிய - வணங்கும்படி, நிற்கை - (தோற்ற மாத்திரத்தில் உருவமாயிருக்கிற) சொருபசித்தியை ஒருவனடைந்து நிற்பது, மேல் - உயர்ந்த நிலையாம். (எ - று.)

க - து:—வாளாயுதத்தால் வெட்டிய போதும் பலகணி வழியாய் ஒழுகிய வெயில் போல் சரீரம் நிலைபெறுவதாகிய அருள் மேனியை அடைவதே ஒருவனுக்கு உயர்ந்த நிலையாகும் என்பதாம். கசக.

**இரென்றிருமென் றப்பால் இருங்கனெனச் செய்யும் சரென்று பறியுந் தனம்.**

ப - ரை :—சர் என்று - பிற்காலத்தில் வெகு விரைவாக, பறியும் - அழிந்து போந் தன்மையுடைய, தனம் - செல்வமானது, ஒருவனை அடையுமாயின், இரு என்று - முன்னே ஒரு மரியாதையும் பெறாதவனுக்கு யாவரும் இரு என்று கூறும் மரியாதையை உண்டு பண்ணி, இரும் என்று - இரும் என்பதாகக் கூறும் மரியாதையைப் பின்பு உண்டு பண்ணி,

அப்பால் - அதன் பின்பு, இருங்கள் என - இருங்கள் என்று கூறும் மரியாதையை செய் செய்யும் - உண்டு பண்ணும். (எ - று.)

**கருத்து :**—ஒரு கணத்தில் அழியுந்தன்மையுடைய செல்வமானது படிப்படியாய் ஒருவனுக்கு மரியாதையை உண்டு பண்ணும் என்பதாம். கஎ௬

**இரேணுகை சேய் அன்னான் இத்தலத்தில் தோன்றில்**
**நரேசரஞ்சிச் செய்வார் நலம்.**

**ப - ரை :**—இரேணுகை - இ ரே ணு கா தேவியினது, சேய் - புத்திரனாகிய பரசுராமனை, அன்னான் - ஒத்தவனாகிய ஒரு தவசி, இத்தலத்தில் - இப் பூவுலகலத்தின் கண், தோன்றில் - வெளிப்படுவானாயின், நரேசர் - மக்களுக்கிறைவராகிய சகல அரசர்களும், அஞ்சி, அத்தவசிக்கு அஞ்சி, நலம் நன்மைகளை, செய்வார் - உலகத்திற்குச் செய்வார்கள். (எ - று.)

**க - து :**—பேரரசர்களையும் அடக்கவல்ல ஒரு தவசி உலகத்தின் கண் விளங்குவானாயின் சகல அரசர்களும் பயந்து நன்மையைக் கவனித்து நடப்பார்கள் என்பதாம். கஎக

**இரைக்கே இரவுபகல் எய்த்தலைவார்க் கில்லை**
**வரைக்கே நிகராம் மனம்.**

**ப - ரை :**—இரைக்கே - வயிற்றுக்கு இரை தேடும் பொருட்டு, இரவு பகல் - இரவும் பக

லும், எய்த்து - இளைப்புற்று, அலைவார்க்கு - உழல்பவருக்கு, வரைக்கே - மலைக்கே, நிகராம் - ஒப்பாகிய, மனம் - திடசித்தம், இல்லை - இராது. (எ - று)

கருத்து:—தேகத்தைப் பாதுகாத்தற் பொருட்டு நாடோறும் வயிற்றுக்கே இரை தேடி உழல்பவருக்கு மனவுறுதி உண்டாகா தென்பதாம். கஎஉ

**உரோக்கப் பொருளும் உடன்வாரா தென்றோர்ந்(து)**
**இரக்கமுடன் ஈதல் இசை.**

ப - ரை :—உரோக்கப் பொருள் - கைவசத்திலுள்ள செல்வமும், உடன் வாராது என்று - உடலை விட்டு உயிர் நீங்கும்போது நம்மோடு கூட வரமாட்டாதென்று, ஓர்ந்து - நன்கு ணர்ந்து, இரக்கமுடன் - கருணையோடு, ஈதல் - வறியவருக்குக் கொடுத்தல், இசை - புகழாகும். (எ - று.)

க - து :—சம்பாதித்து வைத்திருக்கிற பொருளும் நாம் இறந்தபோது உடன் வாராதென்று நன்கு உணர்ந்து தாமுள்ள போதே வறியவருக்குத் தயவுடன் கொடுப்பாராகில், கொடுத்தவருக்கு இப்பிறப்பில் கீர்த்தியும் மறுபிறப்பில் புண்ணியமும் உண்டாகும் என்பதாம். கஎங

**உரோமசனே போல்வார் உலகில் உதிக்கில்**
**சரோசன்மறைக் குண்டாம் தருக்கு.**

ப - ரை:—உரோமசனே - உரோமச முனிவரையே, போல்வார் - போன்ற தவசி

கள், உலகில் - இவ்வுலகத்தில், உதிக்கில் - பிறப்பாராயின், சரோசன் - பிரமாவினாற் சொல்லப்பட்ட, மறைக்கு - வேதநெறிகளுக்கு, தருக்கு - களிப்பானது, உண்டாம் - உண்டாகும். (எ - று.)

க - ரு :—திருவருள் பெற்ற தவசிகள் பூவுலகத்தில் உதிப்பாராயின் வேதநெறிகளுக்குப் பொலிவுண்டாம் என்பதாம். கஎஅ

இரௌரவத்தில் தாழார் இரவி முதலோர்ப்
பரவறுவர் தோய்வார் பரம்.

ப - ரை :—இரவிமுதலோர்-சூரியன் முதலிய தெய்வங்களை, பரவு - வழிபடுகின்ற, அறுவர் - சௌரவர் ஆகிய அறுவகைச் சமயத்தோரும், ரௌரவத்தில் - ரௌரவாதிநரகங்களில், தாழார் - வீழார்கள், பரம் - மேலான பரமுத்தியையே, தோய்வார் அடைவார்கள். (எ - று.)

க - ரு :—சூரியன் முதலிய தெய்வங்களை வழிபடும் அறுவகைச் சமயிகளும் நற்கதியடைவார் என்பதாம். கஎகூ

# லகர வருக்கம்

**இலகும் பரிதிமதி எங்கும் நிறைந்தும்**
**கலகம்விளைக் கும்பெருமான் கண்.**

ப - ரை :—இலகும் - பிரகாசிக்கின்ற, பரிதிமதி - சூரிய சந்திரர் என்னும் இருசுடர்களும், எங்கும் - எல்லாச் சமயங்களிலும், நிறைந்தும் - பொருந்தியிருந்தும், கலகம் - மதங்களில் ஒன்றுக் கொன்று ஒவ்வாத மாறுபாட்டை உயிர்களின் பக்குவ நிலைக்கேற்ப, விளைக்கும் - உண்டு பண்ணுகின்ற, பெருமான் - இறைவனுடைய, கண் - இரண்டு கண்களாம். (எ - று.)

கருத்து :—எங்கும் நிறைந்த கடவுளுக்குச் சூரியனும் சந்திரனும் இரண்டு கண்களாகி விளங்கும் என்பதாம். ௧௱௮

**இலாபம் நினைத்தளவில் இன்புறிற்கைப் பொன்போம்**
**அலாதநதெண்ணிச் சோம்புறலும் ஆங்கு.**

ப - ரை:—இலாபம் - பின்வரும் இலாபத்தை, நினைத்து - எண்ணி, அளவில் - எல்லையற்ற, இன்பு உறில் - இன்பத்தை ஒருவர் அடைந்தால், கைப்பொன் - அவர் கையிலுள்ள பொருளானது, போம் - நட்டமாகும், அலாதது - பின்வருகிற நட்டத்தை, எண்ணி - நினைத்து, சோம்புறலும் - சோம்பல் அடைந்

திருந்தாலும், ஆங்கு - கையிலுள்ள பொரு ளானது நட்டமாகும். (எ - று.)

க - து :—பின்வரும் பயனை நினைத்துப் பெருங்களிப்பு அடைதலும், பின்வரும் நட்டத்தை நினைத்து முயற்சியற்று இருத்தலும் கேடுண்டாகும் என்பதாம். கஎஎ

**இலிங்கம் பொதுவென்னில் எள்ளும் மடமை**
**மலிந்தவரும் கொள்வார் மனத்து.**

ப - ரை :—இலிங்கம் - சிவலிங்கமானது, பொது - சகல சமயங்களுக்கும் பொதுவானது, என்னில் - என்று மெய்யுணர்ந்தோர்கள் கூறு வாராயின், எள்ளும் அதற்கு உடன்படாமல் இகழும், மடமை - அறிவின்மையில், மலிந்த வரும் - மிகுந்துள்ளவரும், மனத்து - தங் கள் உள்ளத்தில், கொள்வார் - அவ்விலிங்கத் தையே தியானிப்பர். (எ - .)

க - து —சிவலிங்கமானது யாவருக்கும் பொதுவானது என்றால், உடன்படாது இகழும் சாமானியரும், அவ்விலிங் கத்தையேதான் மனதில் தியானிப்பார் என்பதாம். கஎஅ

**இலீலைக் கிசையா இளம்பருவத் தாள்கண்**
**சிலீமுகமும் நோயே செயும்.**

ப - ரை :—இலீலைக்கு - புணர்ச்சிக்கு, இசையா - பொருந்தயில்லாத, இளம் பருவத் தாள் - பேதைப் பருவப் பெண்ணினுடைய, கண் - கண்களாகிய, சிலீமுகமும் - பாணங்

**இலையிற் பொதிதரும்நீ றேய்ந்த சமயத்**
**தலைநிற்பார்க் கியாவுஞ் சமம்.**

ப - ரை :—இலையில் - பன்னீரிலையின்கண் வைத்து, பொதிதரு - அவ் இலையால் மூடப்பட்டுள்ள, நீறு - விபூதிப் பிரசாதத்தை, ஏய்ந்த - தன்னிடத்துடைய, சமயத் தலை - கௌமார சமயத்தின் கண், நிற்பார்க்கு - நிலைபெற்ற கௌமாரருக்கு, யாவும் - சகல சமயங்களும்; சமம் - ஒன்றுகும். (எ - று.)

**கருத்து** :—இலைவிபூதியைப் பிரசாதமாக உடைய கௌமாரருக்குச் சகல சமயங்களும் ஒன்றுகவே விளங்கும் என்பதாம். கஅ௬

**உலொன்றி இறந்தோர் உயர்ந்தோரைப் போற்றும்**
**சொலொஞ்சியதஞ் ஞானத் தொடர்பு.**

ப - ரை:—உல் - கழுமரத்தின் கண்-ஒன்றி - ஏறியிருந்து, இறந்தார் - உயிரை விட்ட சமணர்கள், உயர்ந்தோரை - ஞானத்தால் உயர்ந்த பெரியோர்களை, போற்றும் - துதிப்பதாகிய, சொல் - இனிய வார்த்தையைச் சொல்லுவதற்கு, ஒஞ்சியது - நாணமுற்று வருந்தியது, அஞ்ஞானத் தொடர்பு - அஞ்ஞான சம்பந்தமாகும். (எ - று.)

**கருத்து** :—தம்மினும் சிறந்த பெரியோர்களை வணங்காமல் வீணே கழு ஏறிய சமணர்கள் இறந்தது மிகுந்த அறிவீனமாகும் என்பதாம். கஅ௭

**உலோகத்தி லுள்ளநெறி ஒக்கநன்றே யாகும்
கொலோர்தொழில்தீ தென்சொற் கொளில்.**

ப - ரை :—கொல் - கொல்லுதலாகிய, ஓர் தொழில் - ஒரு தொழிலே, தீது - மிகவும் தீமை யுடையது, என் - என்று கூறும், சொல் - அறிவுடையோர் வார்த்தையை, கொளில் - உறுதியாகக் கொள்ளுமாயின், உலோகத்தில் - உலகத்தின் கண்ணே, உள்ள - நிலைபெற் றிருக்கிற, நெறி - சமயங்கள், ஒக்க - முழுமை யும், நன்றேயாகும் - நல்ல சமயங்களே யாம். (எ - று.)

கருத்து:—கொலைத் தொழில் ஒன்று மாத்திரம் இல்லை யாயின் எச்சமயங்களும் நல்ல சமயங்களேயாகும் என்பதாம்.

**இலௌகீக வைதீகத் தெந்நிலைக்கும் என்றும்
உலவாத மெய்யே உரம்.**

ப - ரை :—இலௌகிகம் - உலக நெறியின் கண்ணும், வைதீகத்து - வைதீக நெறியின் கண்ணுமுள்ள, எந்நிலைக்கும் - எவ்வகைப் பட்ட நிலைகளுக்கும், என்றும் - எக்காலத்தும் உலவாத - கெடாத, மெய்யே - சத்தியம் ஒன்றே, உரம் வலிமையாகும். (எ - று.)

க - து :—இலௌகிக நெறிகளுக்கும் வைதீக நெறி களுக்கும் ஆதாரமாயுள்ளது சத்தியமே யாகும் என்பதாம்.

## வகர வருக்கம்

**வழுவை முகத்தினதா வான்பொருளை நாடித்
தொழுமவருக் கில்லை துயர்.**

ப - ரை :—வான் - மேலாகிய, பொருளை - பரம்பொருளை, வழுவை முகத்தினதா - யானை முகத்தையுடைய விநாயகக் கடவுளாகக் கண்டு, நாடி - மனத்தால் தியானித்து, தொழும் அவருக்கு - வணங்குகிறவர்களுக்கு, துயர் - துன்பமானது, இல்லை - உண்டாகாது. (எ - று).

க - து :—பரம்பொருளை விநாயகக் கடவுளாக உள்ளபடி கண்டு வழிபடும் அன்பர்களுக்குத் துன்பங்கள் உண்டாகாதென்பதாம், க-அ-அ

**வான்முதலாம் பூதமைந்தும் மற்றையவுந் தானுன
கோன்முதல்வன் என்பான் குரு.**

ப - ரை:—வான் முதலாம் - ஆகாயம் முதலாகிய, பூதம் ஐந்தும் - பஞ்ச பூதங்களும், மற்றையவும் - மற்றுஞ் சொல்வார் சொல்லும் எல்லாப் பொருள்களும், தானுன - தானே ஆகியுள்ள, கோன் - கடவுளே, முதல்வன் என்பான் - முதற் கடவுள் என்று சொல்பவனே, குரு - ஆசிரியனுவான். (எ - று).

க - து :—எல்லாம் தானாய் நிறைந்துள்ள கடவுளே உண்மைப் பொருள் என்று உணர்த்துபவனே சற்குரு ஆவான் என்பதாம். க-அ-கூ

**வித்தைக் கடல்கடந்து மெய்த்தவத்தைப் பற்றியவர்**
**சித்தைப் பழிப்புச் செயார்.**

ப - ரை:—வித்தை - கல்வி என்னும், கடல் - சமுத்திரத்தை, கடந்து - தாண்டி, மெய்த்தவத்தை - சத்தியத்தவத்தை, பற்றியவர் - உறுதியாகப் பிடித்தவர், சித்தை - அருட் சித்தியை பழிப்புச் செயார் - நிந்தியார்கள். (எ - று.)

க - து :—கல்விக் கடலைக் கடந்த சத்தியத் தவசிகள் சித்திகளை நிந்தியார் என்பதாம். ககo

**வீரத் தவம்பழுத்தோன் மேதினிக்குச் செய்வதெண்ணில்**
**ஆரத் தகாதனநீத் தல்.**

ப - ரை:—வீரத்தவம் பழுத்தோன் - உறுதியான தவமுதிர்ச்சி உடைய ஒருதவசி, மேதினிக்கு - உலகத்திற்கு, செய்வது - செய்யத்தக்க உபகாரம், எண்ணில் - யாது என்று ஆராயுமிடத்து, ஆரத்தகாதன - புசிக்கத்தகாத புலாலுணவை, நீத்தல் - தடுத்தலாம். (எ - று.)

க - து :—உத்தமத்தவசி உலகத்துக்குச் செய்யும் உபகாரம் புசிக்கத்தகாதவைகளைப் புசிக்க ஒட்டாமல் யாவரையும் தடுத்தலாம் என்பதாம். ககக

**உவுருக்கோற் றேற்பறைபோன் றாது முலைப்பேய்**
**தவுமா செயலும் தமிழ்.**

ப - ரை:—உ - உ என்னும் எழுத்தின், உரு - வடிவத்தையுடைய, கோல் - கோலால்

அடிக்கப்படுகிற, தோல் - தோலால் மூடிய, பறை - ஒரு கண்ணையுடைய பறைகளை, போன்று - ஒத்து, ஊதும் - பருத்த, முலை - தனங்களையுடைய, பேய் - பேயானது, கவுமா - கெடும்படி, செயலும் - செய்ததும், தமிழ் - தமிழ் மொழியாகும். (எ - று.)

க - து :—கோரரூபத்தையுடைய பேயைக் கெடும்படி செய்ததும் தமிழ் மொழியேயாகும் என்பதாம். ௧௬௨

**உழூழ்நலத்தார் இன்றெனினும் ஓர்ந்து செயிற்பின்
இழூழ்வருமென் றேனுமவ ரே.**

ப - ரை:—உ - முற்பிறப்பில் செய்த நல்வினைப்பயனாகிய, ஊழ் நலத்தார் - நல்ல ஊழையுடையவர் யாவர் என்னில், இன்று எனினும் - பூர்வத்தில் செய்த நல்வினை நமக்கு இல்லாமற் போனாலும் போகட்டும், ஓர்ந்து - இந்தச் சென்மத்தில் நமக்கு ஏற்றதான நன் முயற்சி யாது என்று நன்கு ஆராய்ந்து, செயின் - அதற்குத் தக்கபடி முயற்சிப்போமாகில், பின் - வருகிற சென்மத்தில், இ - இந்நன் முயற்சியே, ஊழ் - நல்ல ஊழாகி; வரும் என்று - தப்பாது வரும் என்று துணிவு கொண்டு, ஏனும் அவரே - நன் முயற்சியில் நிலை பெற்றிருக்கும் உத்தமர்களேயன்றி மற்றையவரல்லர். (எ - று.)

க - து :—முன்னையநல்லூழ் நமக்கு இன்றாயினும் இம்மையிற் செய்த நன்முயற்சியே மறுமைக்கு நல்ல ஊழாகி வருமல்லவா என்று துணிந்து நன்மையில் முயற்சிப்பவரே முன்னைநல் ஊழ் உடையவராவார் என்பதாம். ௧௧௬

**வெள்ளைக் கலைமகளும் விண்டுமனை யும்புணர்சீர்**
**கொள்ளைத் தவத்தோர் கொளல்.**

ப - ரை :—வெள்ளை - வெண்மை நிறத்தையுடைய, கலைமகளும் - சரசுவதியும், விண்டு - விட்டுணுவினுடைய, மனையும் - மனைவியாகிய இலக்குமியும், புணர் - பொருந்துவதால் உண்டாகும், சீர் - பெருஞ்சிறப்பானது, கொள்ளை - மிகுதியாகிய, தவத்தோர் - மெய்த்தவம் உடையோரால், கொளல் - பெறப் படுவதாம்.

(ஏ - று.)

க - து :—கல்விச் செல்வத்தையும் பொருட் செல்வத்தையும் ஒருங்கு அடையும் பெருஞ்சிறப்பானது மேலாகிய தவசிகளுக்கே உரியதாகும் என்பதாம். ௧௧௭

**வேனன் கலந்த விலக்கை விதியாக்கொண்(டு)**
**ஈனமுற்ற பேரெண் ணிலார்.**

ப - ரை :—வேனன் - வேனன் என்னும் அசுரனானவன், கலந்த - நூதனமாகக் கற்பித்து வேதத்திற் சேர்த்த, விலக்கை - செய்யத் தகாத விதிகளை, விதியா - செய்யத்தகும் விதிகளாக, கொண்டு - ஒப்பிச் செய்து, ஈனம்

உற்றபேர் - பெரும்பழியை அடைந்தவர்கள், எண்ணிலார் - இவ்வுலகத்தில் அநேகர்,

(எ - று.)

க - து:—வேனன் என்னும் அசுரன் கற்பித்து வேதத்தில் சேர்த்த யாகக்கொலையை வேதவிதி என்று துணிந்து செய்து ஈனமடைந்தவர் இவ்வுலகத்தில் அநேகர் என்பதாம். சகூ

**வைவேல் வழுதியன்னர் வாஞ்சை மறவாளே**
**மைவேலைத் தானை மகள்.**

ப - ரை:—மை - கரு நிறத்தையுடைய, வேலை - சமுத்திரத்தை, தானை - உடையாக உடுத்த, மகள் - பூமி தேவியானவள், வை - கூர்மை பொருந்திய, வேல் - வேலாயுதத்தை யுடைய, வழுதி - உக்கிர பாண்டியனை, அன்னர் - ஒத்த அரசர்கள், வாஞ்சை - பேரன் பினால் தனக்குச் செய்த பேருதவியை, மறவாளே - ஒருகாலும் மறவாதவளே யாவாள்.

(எ - று.)

கருத்து:—உக்கிரபாண்டியனை ஒத்த அரசர்களது பேரன்பையே பூமிதேவி எந்நாளும் நினைத்துக் கொண்டிருப்பாள் என்பதாம். ககூ-

**ஒவ்வொரு சமயத்தும் உற்சாகங் கொண்டு**
**தெய்வொருங் கொழித்தார் சிலர்.**

ப - ரை:—ஒவ்வொரு சமயத்தும் - ஒவ்வொரு சமயத்தின் கண்ணும், சிலர் - சிலமெய்

யடியார்கள், உற்சாகம் - தைரியத்தையே, கொண்டு - துணைக்கருவியாகக் கொண்டு, தெவு - புறச் சமயப் பகையை, ஒருங்கு - முற்றும், ஒழித்தார் - நீக்கித் தம் மதத்தை நிறுத்தினார். (எ - று.)

க - து :—ஒவ்வொரு சமயத்துமுள்ள சில மெய்யடியார்கள் தமது தைரியத்தினால் பிறமதங்களைக் களைந்து உத்தம மதங்களை நிலைநிறுத்தினர் என்பதாம். ககஎ

ஓவோடு மவ்வொற் றுறுஞ்சொல்லு டுள்ளபயன்
ஆவோனே என்று மழி யான்.

ப - ரை :—ஓ வோடு - ஓ என்னும் எழுத்துடனே, மவ் ஒற்று - மகர மெய்யானது, உறும் - பொருந்திய ஓம் என்னும், சொல்லுடு - பிரணவமந்திரத்தின் கண், உள்ள - நிலை பெற்றிருக்கின்ற, பயன் ஆவோனே - பொருளாயுள்ளவன் எவனோ அந்த இறைவனே, என்றும் - எக்காலத்தும், அழியான் - அழியாதவனாவான். (எ - று.)

க - து :—பிரணவம் என்னும் மந்திரப்பொருளாவான் எவனோ அவனே அழிவற்ற மெய்க்கடவுள் என்பதாம். ககஅ

வேளவுமவர்க் கெல்லாம் வரமளிக்க வல்லானே
எவ்வுலகுங் காக்கும் இறை.

ப - ரை :—வேளவும் அவர்க் கெல்லாம் - தன்னை வழிபடும் மெய்த்தொண்டர்களுக் கெல்

லாம், வரம் - அவரவர் வேண்டிய வரங்களை, அளிக்க வல்லானே - கொடுத்தருள வல்லவன் யாவனெனில், எவ்வுலகும் - எல்லா உலகங்களையும், காக்கும் - காப்பாற்றவல்ல, இறை - தலைமைப்பரனவான். (எ - று.)

க - து :—சகல லோக நாயகனுகிய இறைவனே தன்னை விரும்பிய மெய்த்தொண்டர்களுக்கு வேண்டிய வரங்களைத் தரவல்லவன் என்பதாம். கக௯

---

## ழகர வருக்கம்

அழகில் அழகியதீண் டாராய்ந் தறியில்
கழகம் புகழ்தரு செங்கை.

ப - ரை:—ஈண்டு - இவ்வுலகத்தின் கண், அழகில் - அழகுடைய பல பொருள்களுள்ளும், அழகியது - மிக்க அழகையுடையது, ஆராய்ந் தறியில் - எது என்று ஆலோசித்துச் சொல்லுமிடத்து, கழகம் - நிறைந்த கல்விமான்களால், புகழ்தரு - புகழப்படுகின்ற கொடையையும், செம் - சிவமுந்த நிறத்தையுமுடைய, கை - கையே என்று சொல்லப்படும். (எ - று.)

க - து :—பெரும் புலவர்களாற் புகழப்படுகிற கொடையை உடையவனது கையே அழகுடையது என்பதாம். உ௦௦

அழாஅது நல்கும் அறிவாளன் செல்வம்
வழாஅது மன்னும் வளர்ந்து.

ப - ரை:—அழா அது - சிறிதும் வருத்தா மல், நல்கும் - உத்தமர்களுக்குக் கொடுக்கும், அறிவாளன் - நல்லறிவை உடையவனது, செல்வம் - செல்வமானது, வளர்ந்து - மேலும் மேலும் பெருகி, வழா அது - சற்றும் அவனைப் பிரியாமல், மன்னும் - நிலைபெற்றிருக்கும். (எ - று.)

க - து :—நல்லோருக்கு மனம் மகிழ்ந்து கொடுக்கும் நல்லறிவாளனது செல்வம் பெருக்கத்தை அடைந்து நிலைபெற்றிருக்கும் என்பதாம். உ0௪

**இழிவந்த சொற்றொருவர்க் கின்னல் விளையார்**
**அழிவின்றி வாழும் அவர்.**

ப - ரை:—அழிவின்றி - யாதொரு கெடுதியுமில்லாமல், வாழும் அவர் வாழவேண்டும், என்னும் எண்ணமுடையவர், இழிவந்த - அவமான வார்த்தைகளை, சொற்று - பேசி, ஒருவர்க்கு - ஒருவருக்கு, இன்னல் - துன்பத்தை, விளையார் - உண்டு பண்ணார். (எ - று.)

க - து :—தமக்கு ஒரு கெடுதியும் இல்லாமல் வாழ வேண்டுவோர் பிறரைநிந்தித்துத் துன்பஞ் செய்யார் என்பதாம். உ0உ

**இழினந் தொழிலாம் இலங்கிழையார் தம்மாற்**
**கெழீஇயார் நோய்பல் கிரி.**

ப - ரை:—இழு - யாவரையும் பலவந்தஞ் செய்து இழுக்கும், ஈனம் - இழி தொழிலையே,

தொழிலாம் - தமது தொழிலாக உடைய, இலங்கு - துலக்கமாகிய, இழையார் தம்மால்; ஆபரணங்களை அணிந்த பொது மாதர்களிடத்து, கெழீஇயார் - புணர்ச்சி இன்பம் அநுபவிக்கும் காமுகர்க்கு, நோய் - அப்புணர்ச்சியாலுண்டாகும் பிணியானது, பல்கிரி - பல மலைகளுக்கு ஒப்பாகும். (எ - று.)

க - து:—ஆடவர்களை வலிந்துபுணரும் பரத்தையரைக் கூடிச்சுகித்த தூர்த்தர்கள் பெரும்பிணியால் மிகவும் வருந்திக் கெடுவார் என்பதாம். ௨0௬

**இழுக்கஞ்சி மெய்ப்புகழ்ச்சி இச்சியார்க் கில்லை**
**ஒழுக்கம் தலைக்கொள் உரம்.**

ப - ரை:—இழுக்கு - அற்பர்களால் உண்டாகும் பழிக்கு, அஞ்சி - பயந்து, மெய்ப்புகழ்ச்சி - அழியாத கீர்த்தியை, இச்சியார்க்கு - பெற விருப்பமில்லாதவருக்கு, ஒழுக்கம் - தமக்குரிய நல் ஒழுக்கத்தை, தலை - சிரசினிடத்து, கொள் - தாங்கிக்கொள்ளும், உரம் - வலிமையானது. இல்லை - இல்லையாம். (எ - று.)

க - து:—அற்பர்களால் உண்டாகும் பழிச்சொல்லுக்குப் பயந்து மெய்ப்புகழை விரும்பாதவருக்கு நல் ஒழுக்கம் இடையாது என்பதாம். ௨0௭

**இழுஉ வினைப்பேய் இடர்செயினும் நீதி**
**வழுவுக் கெடார்நன் மகர்.**

ப - ரை:—வினைப்பேய் - பழவினை என்னும் பைசாசமானது, இழூஉ - இழுத்து, இடர் செயினும் - துன்பஞ் செய்தாலும், நன்மகர் - நல்லோர்கள், நீநி - நடுவு நிலைமையினின்றும், வழூஉ - வழுவி, கெடார் - கெடமாட்டார்கள். (எ - று.)

க - து:—பழவினைப் பேயானது மிகவும் மலைத்துத் துன்பப்படுத்தினாலும் நன்மக்கள் நியாயம் தவறிக் கெடார்கள் என்பதாம். உ0௯

எழென்றும் இருந்திகழ்வாட் கின்புறுவான் தன்மை
பழென்றிலவைக் கெஞ்சும் படி.

ப - ரை:—எழு என்றும்-எழுந்திரு என்று கூறிய பின்னும் எழுந்திராமல், இருந்து - இருந்து கொண்டே, இகழ்வாட்கு - எதிர்த்து நிந்திக்கும் மனைவியின் பொருட்டு, இன்புறுவான் - மகிழ்ச்சியடையும் ஒருவன், தன்மை - தனது வார்த்தைக்கு இசையும்படி அவளைக் கெஞ்சும் தன்மையானது, இலவை - பழுக்கும் தன்மையில்லாத இலவ மரத்தை நோக்கி, பழு-ஒ இலவே நீ என் வார்த்தைக்கு இசைந்து பழம் பழுக்கவேண்டும், என்று - என்பதாக நல்ல வார்த்தை சொல்லிக் கெஞ்சும் தன்மையை ஒக்கும். (எ - று.)

க - து:—தனது வார்த்தைக்குச் சற்றும் இசையாது இகழும் மனைவியைக் கணவனைவன் தனது வார்த்தைக்கு

இசைந்து ஒழுக்கும்படிக் கொஞ்சுவது, பழந்தரும் தன்மை இல்லாத இலவமரத்தைப் பழம் தரும் பொருட்டுக் கெஞ்சு தல் போலும் என்பதாம், ௨0௬

**ஏழேழ்வர் தாமும் இருந்திரைநீர்ப் பொய்கைநடு**
**வீழேதஞ் செய்த முன்னூல் மெய்.**

ப - ரை:—ஏழ் ஏழ்வர் தாமும் - கடைச் சங்கைப் புலவர் நாற்பத்தொன்பதின்மரும், இரும் - பெரிய, திரை - அலைகளை வீசும், நீர் - நீரையுடைய, பொய்கை - பொற்றாமரைத் தடத்தின், நடு - மத்தியில், வீழ் - விழுந்து அழுந்தும்படி, ஏதம் - துன்பத்தை, செய்த - உண்டாக்கிய, முன்னூல் - திருக்குறள் என்னும் தமிழ்மறை, மெய் - பொய்யாமொழி ஆகும். (எ - று.)

க - து:—நக்கீரர் முதலிய சங்கப்புலவர்களை வெற்றி கொண்ட திருக்குறள் என்னும் முதல் நூலே மெய்ந்நூல் ஆகும் என்பதாம். ௨0௭

**அழைக்குந் தொழும்பர் அவாவளிக்கும் அம்மான்**
**மழைக்குங் கருணைநல்கு வான்.**

ப - ரை:—அழைக்கும் - தன்னைச் சகள வடிவாகத் தியானித்து அழைக்கிற, தொழும்பர் - மெய்த் தொண்டர்களுக்கு எதிர் வந்து, அவா - அவரவர் விரும்பிய வரங்களை, அளிக்கும் - கொடுத்தருளுகிற, அம்மான் - இறை

வனே, மழைக்கும் - மேகத்துக்கும், கருணை - பயனை நினையாது பெய்கிற அருளை, நல்கு வான் - கொடுத்தருளுவான். (எ - று.)

க - து :—மெய்யன்பர்கட்கு வேண்டிய வரங்களைக் கொடுத்தருளும் இறைவனே மேகத்துக்கும் கைம்மாறு கருதாது பெய்யும் கருணையை உண்டாக்குவான் என்பதாம். உ0அ

உழவொரு தொழிலேமிக் குத்தமமென் றோர்ந்தார்
அழவொலி மிடிநோ யறும்.

ப - ரை :—ஒரு - சமானமில்லாத, உழவு தொழிலே - உழுது பயிர் செய்கின்ற தொழிலே, மிக்கு - மிகவும், உத்தமமென்று - மேன்மையுடைய தொழிலென்று, ஓர்ந்தார் - அறிந்து அத்தொழிலில் முயன்றவுடன், முன்னர் அடைந்திருந்ததும், அழவொலி - அழுகைச் சத்தத்தை உண்டாக்கவல்லதுமான, மிடிநோய்-வறுமைப் பிணியானது, அறும்-கெடும். (எ - று.)

க - து :—உழுது பயிர் செய்யும் பயிர்த்தொழிலின் சிறப்பை நன்கறிந்தவர் அத்தொழிலில் ஈடுபட்டவுடன் முன்னர் அவ்வறிவின்மையால் நேரிட்டிருந்த வறுமை கெடும் என்பதாம். உ0க

ஊழோடு போரிட் டொருவன் உறுக்குமென்
வீழோகை பெற்றகதை மெய்.

ப - ரை :—ஒருவன் - ஒப்பற்ற மார்க்கண்டேயரானவர், ஊழோடு - பழவினையுடன்,

போரிட்டு - போர் செய்து, உறுக்கும் - பயமுறுத்திக்கொண்டு வந்த, எமன் - எமனானவன், வீழ் - சிவபெருமானுடைய திருவடியால் உதைபட்டு விழும்படி செய்ததனால் உண்டாகிய, ஓகை - பேரானந்தத்தை, பெற்ற - அடைந்த, கதை - சரித்திரமானது, மெய் - உண்மையாகும். (எ - று.)

க - து :—ஊழ்வினையோடு போர் புரிந்து எமனையும் வென்ற மார்க்கண்டேயரது சரித்திரம் உண்மைச் சரித்திரமாகும் என்பதாம். உ௬0

அழௌவை களிகூர ஆனைமுகன் வெள்ளிப்
பழமலையில் உய்த்தான் பரிந்து.

ப - ரை :—ஆனை முகன் - விநாயகக் கடவுளானவர், அழு - தமது சந்நிதியில் விண்ணப்பம் செய்து கொண்ட, ஔவை - ஔவையார், களிகூர - மிக மகிழும்படி, பரிந்து - கிருபையுடன் இனியவார்த்தைகளைக் கூறி, வெள்ளிப் பழமலையில் - அநாதியாகிய கைலயங்கிரியில் சேரும்படி, உய்த்தான் - துதிக்கரத்தால் தூக்கி விடுத்தருளினர். (எ - று.)

க - து :—விநாயகக் கடவுளானவர், மெய்யன்புடையவ்ளவையாரை மிக மகிழ்வித்துக் கைலாயகிரியின்கண் செலுத்தினரென்பதாம். உ௬க

## ளகர வருக்கம்

இளகா மனத்தினவர்க் கெய்தாது சற்றும்
துளவாரன் செய்யும் தொழில்

ப - ரை:—இளகா - இரக்கமில்லாத, மனத்தினவர்க்கு - நெஞ்சத்தை உடையவருக்கு, துளவாரன் - துளபமாலையை அணியும் திருமால், செய்யும் - செய்கின்ற, தொழில் - காக்கும் தொழிலானது, சற்றும் - சிறிதும், எய்தாது - உண்டாகாது. (எ - று.)

க - து:—சிவகாருணியமில்லாத சித்தத்தையுடையவரிடத்து உலோகோபகாரச் செய்கை அற்பமும் அடையாதென்பதாம். உசஉ

இளாவிருத மாதிஇடந்தோறும்போய் மீள்சீர்
கொளாருவகைக் குண்டே குறை.

ப - ரை:—இளாவிருதமாதி - இளா விருதம் முதலாகிய, இடந்தோறும் போய் - கண்டங்கள் தோறும் சென்று, மீள் - திரும்பத்தக்க, சீர் - திரு அருட் சித்தியை, கொள்ளார் - பெறாதவருடைய, உவகைக்கு - மகிழ்ச்சிக்கு, குறை - குறைவானது, உண்டு - உளதாகும். (எ - று.)

க - து :—சமுத்திரம் சூழ்ந்த பூமிமுழுதும் சஞ்சரித்து மீள்வதற்கேற்ற சித்திகளைப் பெறாதவருடைய மகிழ்ச்சிக்குக் குறைவுண்டாம் என்பதாம். உசக

**இளிபட்ட தன்மையரும் ஈசனருள் எய்தில்**
**களிமுற்றும் வாழ்வடைவார் காண்.**

ப - ரை:—இளிபட்ட - இழிவு பொருந்திய தன்மையரும் - செய்கை உடையவரும், ஈசன் - இறைவனுடைய, அருள் - கருணையை, எய்தில்- அடைவாராயின், களிமுற்றும் வாழ்வு - முற்றிய பேரின்ப வாழ்க்கையை, அடைவார் - பெறுவார்கள், காண் - நீ அறிவாயாக, (எ-று.)

க - து :—இறைவன் கருணையைப் பெறுவார்களாயின் இழிந்தவரும் போக மோட்சங்களை ஒருங்கு அடைவார் என்பதாம். உகக

**இளி நிற்கியான்அஞ்சேனென் றீசனன்பிற் றோய்ந்து**
**துளீர் நுமக்கின் றுண்மைச் சுகம்.**

ப - ரை :—ஈசன் - இறைவனுடைய, அன்பில் - கருணை என்னும் கடலினிடத்து, தோய்ந்து - மூழ்கிபின்பு, உங்களையடைந்த பழியை நோக்கி, இளி - ஓ பழியே! நிற்கு - உனக்கு, யான் - நான், அஞ்சேன் - இனிப் பயப்பட மாட்டேன், என்று - எனத் திடங்கொண்டு, துளீர் - ஆனந்தக் கூத்தாடாதவர்களே, நுமக்கு - உங்களுக்கு, உண்மைச் சுகம் - அழியாத பேரின்பச் சுகமானது, இல்லை - இல்லவே இல்லை. உண்டென்று மதியாதீர்கள். (எ - று.)

**க- து:**—இறைவன் அருளை நிறையப் பெற்று உலக சிந்தையைக் கெடுத்து, ஆனந்தக் கூத்தாடாதவர்களே? உங்களுக்கு உண்மைச் சுகமில்லை. உண்டென்று மதியன்மின் என்பதாம். ௨௧௫

**உளுத்த மரமேபோன் றுள்ளுடைவார்க் கில்லை**
**கொளுத்தழல்நேர் வீரக் குணம்.**

**ப - ரை:**—உளுத்த - உளுப்படைந்த, மரமே போன்று - மரத்தைப் போல, உள் உடைவார்க்கு - மனத்திடங்கெட்டு விசனமுற்ற வருக்கு, கொளுத்து - மூளப்பண்ணிய, அழல்- நெருப்பை, நேர் - ஒப்பாகிய, வீரக்குணம் வீரியத்தன்மை, இல்லை - உண்டாகாது.
(எ - று.)

**க - து:**—மனோ தைரியம் கெட்டு வியாகுலத்தைப் பற்றியவருக்கு வீரத்தன்மை உண்டாகாதென்பதாம். ௨௧௬

**உளுக்கமிலார் மெய்யருட்சீர் உற்றாலுஞ் செய்யார்**
**கொளுஉ நலத்தைக் குறித்து.**

**ப - ரை:**—உள் - இருதயத்தில், ஊக்கம் - நல்லுணர்ச்சி, இலார் - இல்லாதவர், மெய் - உண்மையாகிய, அருட்சீர் - திருவருட் செல்வத்தை, உற்றாலும் - பெற்றாராயினும், கொளுஉம் - அறிவுடையோர் ஒப்புக்கொள்ளத்தக்க, நலத்தை - நன்மைகளை, குறித்து - நன்கு ஆராய்ந்து, செய்யார் - செய்யமாட்டார்கள்.
(எ - று.)

கு - து :—உள்ளத்தில் நல்லுணர்ச்சி இல்லாத சிலர் தெய்வீகத்தால் அருட்பேற்றை அடைந்தாலும் செய்யத்தக்க நன்மைகளைக் கவனித்து உலகத்துக்குச் செய்யமாட்டார்கள் என்பதாம். உகள.

**இளெகரத்திற் றேய்ந்தாங்கும் ஈரமிலார்க் கில்லை**
**தளெலும்பூன் றின்னுந் தகை.**

ப - ரை.—இள் - ளகர மெய்யானது, எகரத்தில் - எகர உயிரின்பின், தோய்ந்தாங்கும் - புணர்ந்தனாலுண்டாகும் பதத்தின் அருத்தமாகிய எள் என்னும் அளவும், ஈரம் இலார்க்கு - சீவ கருணை இல்லாதவருக்கு, தள் - தள்ளத் தக்க, எலும்பு - எலும்புகளையும், ஊன் - புலாலையும், தின்னு - புசியாத, தகை - பெருந் தன்மை, இல்லை - இராது. (எ-று.)

கு - து :—எள் அளவும் இரக்கமில்லாதவருக்கு என்பை யும் புலாலையும் புசியாத பெருந்தன்மை இராதென்பதாம். உகஅ

**இளேய்ந்தநா காரத்தின் ஏற்றம் உணரான்**
**உளேங்கித் தளர்தீங் குறும்.**

ப - ரை:—இள் - ளகர மெய்யை, ஏய்ந்த - ஈற்றிற் பொருந்திய நாகாரத்தின் - நா என்னும் எழுத்தின் அருத்தமாகிய வாழ்நாள்களின் அருமையை, உணரான் - அறியாதவனாய் அந் நாள்களை வீணே போக்கினவன், உள் - மனத் தினிடத்து, ஏங்கி - ஏக்கத்தையடைந்து, தளர்·

உயிர் சோரும்படியான, திக்கு - பெருந் துக்கத்தை, உறும் - மரண காலத்தில் அடைவான். (எ-று.)

க - து :—நன்மைகளைச் செய்யாமல் வாழ்நாட்களை வீண் போக்கினவன் மரணகாலத்தில் பெருந்துக்கத்தை அடைவான் என்பதாம். உகக

**இளையா மனத்தினர்க்கே யீடிலருள் தோன்றும்**
**தளையாம் வினையைத் தணந்து.**

ப - ரை:—இளையா - சகுணத்தியானத்தில் தளர்ச்சியடையாத, மனத்தினர்க்கே - மனத்தினை உடையவருக்கே, தளையாம் - அவர்களைப் பிணித்துக் கொண்டிருந்த, வினையை - கருமங்களை, தணந்து - நீக்கிக்கொண்டு, ஈடில் - சமானமில்லாத, அருள் - திருவருளானது, தோன்றும், உதயமாகும். (எ - று.)

க : து :—உருவத்தியானத்தில் சற்றும் சலிப்படையாதவருக்கே திருவருள் உதயமாகும் என்பதாம். உஉக

**உளொரு தொழும்பற் குலகனைத்தும் ஈவான்**
**இளமை கெடாமுதியோ னே.**

ப - ரை:—இளமை - இளமைப் பருவமானது, கெடா - எக்காலத்தும் கெடாத, முதியோன் - பழையோனாகிய இறைவனே, உள் - தன்னை இடைவிடாது தியானிக்கின்ற, ஒரு தொழும் பற்கு - ஒரு தொண்டனுக்கு உலகு

அனைத்தும் - சகல உலகங்களையும், ஈவான் - கொடுத்தருள் வான். (எ - று.)

க - து :—பரமன் சகல உலகங்களையும் தன்னை வழிபடு கிற ஒரு மெய்த்தொண்டன் வேண்டினும் கொடுத்தருள்வான் என்பதாம். உஉஉ

**உளோம்போதி யென்றொருவற் கோதிறைபண்**
**அளோம்யாமென் றேமாப் பவர். [போரார்**

ப - ரை:—அளோம் - கூர்மையாகிய பேரறிவுடையோம், யாம் - நாம், என்று - என்று மதித்து, ஏமாப்பவர் - இறுமாப் படைபவர், ஒருவர்க்கு - ஒப்பற்ற சுந்தரமூர்த்தி நாயனுருக்கு, உளோம் - யாம் ஆலயத்திலிருக்கின்றோம், போதி - நீ செல்லுவாய், என்று - என்பதாக, ஓது - விடை கொடுத்தருளிய, இறை - பரமன், பண்பு - தனது மெய்யடியார்களையும் வருத்தும் தன்மையை, ஓரார் - நன்கு உணர்கின்றாரில்லை. (எ - று.)

க - து :—தம்மைப் பேரறிவுடையவராக மதித்து இறுமாப்பவர், பரமன் தனது மெய்த் தொண்டர்களையும் வருத்தப் படுத்தும் தன்மையை உணராதவராவார் என்பதாம். உஉங

**இளௌகாரந் தோறும் இயைந்தாங் கிருளும்**
**உளதுயிர்கட் கெல்லாமுள் ளுள்.**

ப - ரை:—இள் - ளகரமானது, ஔகாரந் தோறும் - உயிரும், உயிர் மெய்யுமாகிய ஔ

காரங்கள் தோறும், இயைந்தாங்கு - பொருந்தி இருத்தல் போல், இருளும் - ஆணவ மலமும், உயிர்கட் கெல்லாம் - சகல உயிர்களுக்கும், உள்ளுள் - தத்தம் உள்ளத்தின் மறைபட்டு, உளது - பொருந்தியிருக்கிறது. (எ - று.)

க - து :—அகரமானது ஔகாரங்கள் தோறும் இயைதல் போல ஆணவமலமும் உயிர்கள் தோறும் இயைந்து நிற்கும் என்பதாம். ௨௨௧

## றகர வருக்கம்

அறமே யுயர்வென் றறிவார் அடைவார்
திறமாய தெய்வச் செயல்.

ப - ரை:—அறமே-தருமமே, உயர்வு என்று - மற்றைப் பொருளின் இன்பங்களைப் பார்க்கிலும் உயர்வுடையதென்று, அறிவார் - உறுதியாக உணர்ந்தவர்கள், திறமாய - தகுதியாகிய, தெய்வச் செயல் - தெய்வீகச் செயல்களை, அடைவார் - பெறுவார்கள். (எ - று.)

க - து :—அறம், பொருள், இன்பங்களுக்குள் அறமே எல்லாப் பயன்களையும் தரவல்லதென்று உணர்ந்தவர்களே தெய்வீகச் செயல்களைப் பெறுவார்கள் என்பதாம். ௨௨௨

அருமல மூன்றும் அறப்பெற் றவனே
பெருநல மெய்தப் பெறும்.

ப - ரை:—அறு - நீங்குதற்கரிய, மலம்மூன்றும் - ஆணவாதி மும்மலங்களும், அற - நீங்கும் பொருட்டு, பெற்றவனே-உண்மை ஞானத்தைப் பெற்றவொருவனே, பெறு-அடைதற்கரிய, நலம் - முத்தி இன்பத்தை, எய்தப் பெறும் - அடையப் பெறுவான். (எ - று.)

க - து :—தத்துவ ஞானம் பெற்றவனே முத்தி இன்பம் பெறுவான் என்பதாம். உஉ௬

இறிக்கைச் சிலையாக்கி எய்கின்றேன் காம
வெறிக்கஞ்சார்க் கெய்தரிது வீடு.

ப - ரை:—இறு - முறிக்கப்படும், இக்கை - கரும்பை, சிலையாக்கி - வில்லாகக்கொண்டு, எய்கின்றேன் - புட்ப பாணங்களைப் பெய்யும் மன்மதனாலுண்டாகும், காம வெறிக்கு - காமப் பயித்தியத்துக்கு, அஞ்சார்க்கு - பயப்படாதவருக்கு, வீடு - முத்தியானது, எய்தரிது - கிடைப்பது அருமையாகும். (எ - று.)

க - து :—மன்மதனாலுண்டாகும் காம வெறிக்குப் பயப்படாதவர் மோட்சமடைவது அரிது என்பதாம். உஉ௬

உஉஎ

இற்றேன் றிகழாமல் ஏற்றார் சிலர்வீட்(டு)
உற்றிய வாறும் உள.

ப - ரை:—இல்-இல்லறத்தை, தீது என்று - குற்ற முடையதென்று, இகழாமல் - நிந்தி

யாது, ஏற்றார் - ஏற்றுக் கொண்டவருள், சிலர்- சில பெரியோர்கள், வீட்டு - மோட்சத்தின் கண், உயீ இய வாறும் - பொருந்திய வரலாறு களும், உள - இவ்வுலகத்தில் இருக்கின்றன. (எ - று.)

க - து :—இல்லறம் பூண்டவர்களுக்குள் சில பெரியோர் கள் வீடு அடைந்த சரித்திரங்கள் இவ்வுலகத்துண்டு என்பதாம்.

**உறுக்கும் நமவாதை யுள்ளத்திற் றோன்ற(து)**
**அறுக்குமெழுத் துண்டே யறி.**

ப - ரை :—உறுக்கும் - பயமுறுத்திக் கொண்டு வரும். நமவாதை - எமனாலுண்டா கும் மரணத்துன்பம், உள்ளத்தில் - சித்தத்தி னிடத்து, தோன்றது - அற்பமுமுண்டாகாமல், அறுக்கும் - கெடுக்கவல்ல, எழுத்து - மந்திரங் கள், உண்டு - இருக்கின்றன, அறி - அவற்றுள் ஒன்றை மானதமாய் உச்சரிப்பாயாக. (எ-று.)

க - து :—எமனாலுண்டாகும் மரணத்துன்பத்தைக் கெடுக்கவல்ல மந்திரங்களுள் ஒரு மந்திரத்தை நன்குணர்ந்து சொல் என்பதாம். எ-தேற்றம். ௨௨௮

**உறாஉப் பரவுமவர்க் கோகைதரும் ஊர்நீர்**
**வெறாஉப் பழிக்கை விடு.**

ப - ரை :—உறாஉ - சென்று, பரவும் அவர்க்கு - வழிபடும் தொண்டர்களுக்கு, ஓகை- பேரின்பத்தை, தரும் - கொடுக்கவல்ல, ஊர் -

தலங்களையும், நீர் - தீர்த்தங்களையும், வெறூஉ - வெறுத்து, பழிக்கை - நிந்திக்கும் மூடப் புத்தியை, விடு - விட்டுவிடுவாயாக. (எ - று).

க - து :—வீட்டுக்கு ஏதுவாகிய மூர்த்தி தலம் தீர்த்தங்களை வெறுக்கும் மூடப்புத்தியை விட்டுவிடு என்பதாம். உஉகூ

**இறைதென் றற்காங் குன்றத் திறைவ னருளைப்**
**பெறென் றுரைப்பார் பின் போய்ப் பிழை.**

ப - ரை:—தென்றற்கு - தென்றற் காற்றுக்கு, இல்லாம் - உறையுளாகியுள்ள, குன்றத்து - பொதியை மலையின் கண் எழுந்தருளியிருக்கின்ற, இறைவன் - தவத்தலைவராகிய அகத்திய முனிவரது, அருளை - கருணையை, பெறு - பெற்றுக்கொள், என்று - என்பதாய், உரைப்பார் - போதிப்பவருக்கு, பின்போய் - பின் சென்று, பிழை - நீ பிழைத்துக் கொள்வாயாக. (எ - று).

க - து :—அகத்திய முனிவரது அருளையடைய விரும்புமவரை அடுத்து வழிபட்டுப் பிழைத்துக்கொள் என்பதாம். கஉ0

**இறேதந் தரல்போன் றியங்கிடையார் மோகத்(து)**
**உறேமென் றுரையார் உருச்.**

ப - ரை:—இறு - முறிபடும், ஏதம் - துன்பத்தை, தரல் போன்று - உண்டாக்குவதை ஒத்து, இயங்கு - துவளுகின்ற, இடையார் -

இடையை உடைய பெண்கள் பேரிலுண்டா
கும், மோகத்து – மயக்கத்தில், உறேம் - ஒரு
காலும் அகப்படோம், என்று - என்பதாக,
உரையார் - தமது வாக்கினாற் சொல்லமாட்
டார்கள், உறார் - அம்மயக்கம் சிறிதும் பொருந்
தாத நின்மல சித்தத்தை யுடைய பெரியோர
கள். (எ - று.)

கு - து :—அவாவை யொழித்த தவமுடைய பெரியோர்
கள், பெண் மோகத்தில் ஈடுபட்டுச் சிறிதும் உழலோம் என்று
ஆண்மை உரையார்கள் என்பதாம். ௨௧௧

**அறைப்பூடுஞ் சிற் றறுகும் அன்னவா மாயா**
**மறைப்பால வாம்பல் மதம்.**

ப - ரை:—பல்மதம் - பலவித சமயங்கள்.
அறைப்பூடும் - அறைக்கிரையையும், சிற்றறு
கும்-சிறிய அறுகம் புல்லையும், அன்னவா-
ஒப்பவைகளாகி, மாயா—கெடாத, மறைப்பால
ஆம் - வேதங்களிடத்துள்ளவாம். (எ - று.)

கு - து :—அறைக்கிரையும், அறுகம்புல்லும் இடையூற்
றால் நசியாது பூமியில் விளங்குவது போலப் பல சமயங்கள்
வேதங்களிடத்திற் சொல்லப்பட்டுள்ளன என்பதாம். ௨௧௨

**உறொகுத் தமணரைமுன் உய்த்தான்கைந் நீற்றால்**
**அறொலைத்தாட் கொள்வதரி தன்று**

ப - ரை:—உல் - கழுமரங்களை, தொ
குத்து – சேகரித்து, அமணரை - சமணர்களை,

முன் — முற்காலத்தில், உய்த்தான் - அவற்றில் ஏற்றிய திருஞான சம்பந்த சுவாமிகள் - கை - தமது திருக்கரத்தில் தாங்கிய, நீற்றால், விபூதியினால், அல் - அச்சமணர்களுடைய அஞ்ஞானத்தை, தொலைத்து - கெடுத்து, ஆட்கொள்வது - அடிமைகளாக்கிக் கொள்வது, அரிதன்று - அருமையன்றாகும். (எ - று.)

க - து :—சமணர்களைக் கழுவேற்றிய திருஞானசம்பந்த சுவாமிகள் அங்ஙனம் செய்யாது அச்சமணர்களைத் தடுத்தாட்கொள்ளும் நிமித்தம் எண்ணினால் அஃது முடிவது அரிதன்று என்பதாம். உ௲௩

உறுமோங்கார வட்டத்தின் உட்பயனோர் வாரை
வெறேமவர்க்கெந் நாவொருநல் வீடு.

ப - ரை:—உறு - ஆறு சமயங்களுக்கும் பொருத்தமாகிய, ஓங்கார வட்டத்தின் - பிரணவ எழுத்தின், உட்பயன் - உட்பொருளை, ஓர் வாரை - சந்தேகமும், மாறுபாடு மின்றித் தெளிந்தவர்களை, வெறேம் - யாம் வெறுக்க மாட்டோம், அவர்க்கு - அப்பெரியோர்களுக்கு, எம் - நம்முடைய, நா - நாவானது, ஒரு - ஒப்பற்ற, நல் வீடு - நன்மை பொருந்திய உறையுளாகும். (எ - று.)

க - து :—பிரணவம் என்னும் மந்திரத்தின் உண்மைப் பொருளை நன்கு உணர்ந்தவர்களை மனமொழி மெய்களால் யாம் வழிபடுவோம் என்பதாம். உ௲௪

என - என்று, உரைக்கை - சொல்லுவது, மேலோர்க்கு - அறிவுடையோர்கட்கு, இசை - கீர்த்தியாகும். (எ - று.)

க - து :—அநாதி முத்தனாகிய ஒரு கடவுளே எங்கும் நிறைந்திருக்கின்றான் என்று உரைப்பது பெரியோர்களுக்குச் சிறப்பாகும் என்பதாம். உகசு

**அனசந் தருமதியம் அன்ன மதியோர்**
**கனவும் பொருளென்பார் காண்.**

ப - ரை:—அல் - இராத்திரி காலத்துள்ள இருளுக்கு, நாசம்-கேட்டை, தரும்-உண்டு பண்ணுகிற, மதியம் - பூரண சந்திரனை, அன்ன - ஒப்பாகிய, மதியோர் - குளிர்ந்த அறிவினை உடையவர், கனவும் - சிலர் பொய் யென்று கூறும் சொப்பனத்தையும், பொருள் என்பார் - மெய்யென்று கொள்ளுவார், காண் இதை நீ அறிவாயாக. (எ - று.)

க - து :—நல்ல அறிவினை உடையவர் சொப்பனத்தையும் பயன் உடையதெனக் கருதுவார் என்பதாம். உகஎ

**அனிச்ச மலர்நேர் அடியுடையா ராசை**
**இனிப்பினும்சற் றிசனைநன் கெண்.**

ப - ரை:—அனிச்சமலர் - அனிச்சப் பூவினை, நேர் - ஒத்த, அடியுடையார் - பாதங்களை உடைய மாதர்களால் உண்டாகும், ஆசை - இச்சையானது, இனிப்பினும் - மன

தக்கு இனிமை தருவதாயினும், ஈசனை - பரமனை, நன்று - நன்றாக, சற்று - சற்றே, எண் - தியானிப்பாயாக. (எ - று.)

க - து :—பெண்ணாசையானது மனதை விழுங்கிக் கொண்டு ருசித்தாலும் இறைவனையும் சற்று நேரம் நன்றாகத் தியானித்துக்கொள் என்பதாம். ௨௧௮

**அலிங்கத் துறந்தேற் றருந்தவமே செய்யும்**
**முனீந்திரரே பாரின் முதல்.**

ப - ரை:—அல் - அஞ்ஞானமானது, நீங்க - நீங்கும் பொருட்டு, துறந்து - துறவறம் பூண்டு, ஏற்று - பிச்சை எடுத்துண்டு, அரும் - அரிய, தவமே - தவத்தினையே, செய்யும் - செய்கிற, முனீந்திரரே - பெரியோர்களே, பாரின் - உலகத்தில், முதல் - முதன்மை உடையவராவார். (எ - று.)

க - து .—நல்லொழுக்கமுடைய தவசிகளே உலகத்தில் உயர்ந்தவர்கள் என்பதாம். ௨௧௯

**உனுங்கருத்தி னுள்ளும்உறைவான் அருட்சீர்**
**மினுங்கிற் றவிரும் வினை.**

ப - ரை:—உனும் - நினைக்கின்ற, கருத்தின் உள்ளும் - மனத்தின் அகத்தும், உறைவான் - வசிக்கும் செகதீசனது, அருட்சீர் - திருவருட் செல்வமானது, மினுங்கில் - ஒருவனிடத்துச் சற்றே பிரகாசித்து விடுமாகில், வினை -

சகல வினைகளும், தவிரும் - அவனை விட்டு நீங்கும். (எ - று.)

க - து:—ஒரு தொண்டனிடம் இறைவனது கிருபை சற்றே வெளிப்படுமாகில் உடனே அவனுக்குச் சகல வினைகளும் நீங்கிவிடும் என்பதாம். ௨௫௦

**உனூல்எனூல் நன்றென் றுரைபயிற்றும் வாதம்**
**மனூகத்தோர் தம்பால் வரா.**

ப - ரை:—உன் - உன்னால் அபிமானிக்கப்பட்ட, நூல் - நூலானது குற்றமுடையது, என் - என்னால் அபிமானிக்கப்பட்ட நூல், நன்று - நன்மை உடையது, என்று - என்பதாய், உரை பயிற்றும் - தப்பு வார்த்தைகளைக் கற்பித்துப் பேசும், வாதம் - தருக்கமானது, மன் - நிலை பெற்ற, ஊகத்தோர் தம்பால் - சமபுத்தியுடைய அறிஞர் களிடத்து, வரா - உண்டாகாது. (எ - று.)

க - து:—தீதேயாயினும் தாம் பிடித்த பிடிவிடாது பேசும் குற்றவாளிகளின் குதர்க்கமானது நிலைபெற்ற உண்மை அறிவுடையவர்களிடத்து இராது என்பதாம். ௨௫௧

**இனென்பொறிமுன் மவ்விகரம் ஏய்ந்தன்ன வாழ்வில்**
**நினைஞ்சுழல மாய்தல் நவை.**

ப - ரை:—இன் - னகரமெய், என் - என்று சொல்லப்படுகிற, பொறி - எழுத்தின், முன் - முகப்பில், ம இகரம் - மி என்னும்.

எழுத்தானது, ஏய்ந்தன்ன - பொருந்தியதனு ளுண்டாகும் மின் என்னும் பதத்தின் அருத்த மாகிய மின்னலை ஒத்த, வாழ்வில் - பொய் வாழ்க்கையினிடத்து, நன் - நன்மைக்கு ஏது வாகிய, நெஞ்சு - மனதை, உழல - வாய் நாள் முழுதும் அலையவிட்டு, மாய்தல் - விலுக இறந்து போவது, நவை - மனிதப் பிறப்பை அடைந்தவருக்குக் குற்றமாகும். (எ - று.)

க - து :—நிலையற்ற வாழ்வில் வாழ்நாளை வீணுகக் கழித்துவிட்டு இறந்துபோவது மனிதருக்குக் குற்றமாகும்.

உ௫௩

**இனேயந் தொடர இடைந்தாலும் ஈசன்**
**தனேயங்கொள் வாரேற் றவர்.**

ப - ரை:—இல் - இல்லறத்தின், நேயம் - ஆசையானது, தொடர - விடாமற் பற்ற, இடைந்தாலும் - தரித்திரம் முதலியவற்றால் வருத்த, முற்றாலும், ஈசன்தன் - செகதீசனை நாடும், நேயம் - விருப்பத்தை, கொள்வாரேல் - ஒருவர் உடையவராயின், தவர் - அவர் மெய்த்த வசிகளேயாம். (எ - று.)

க - து : பெருந்துயரத்தோடு இல்லறத்தில் வாழ்பவ ராயினும் தெய்வ அருளை விரும்புவாராயின், அவரும் மெய்த் தவசிகளாவார் என்பதாம்.

உ௫௪

**இனைய இடர்நலமென் றெண்ணுணர்ச்சி யுண்டேல்**
**கனைகடற்பார் காக்கை கடன்.**

ப - ரை:—இடர் - துன்பமும், நலம் - சுகமும், இனைய - இத்தன்மை யுடையன, என்று — என்பதாய், எண் - பகுத்தறிகின்ற, உணர்ச்சி - அறிவானது, உண்டேல் - ஒரு தவசிக்கு இருக்குமாயின், கனை, - பேரொலியை யுடைய கடல் - சமுத்திரஞ்சூழ்ந்த, பார் - பூமியை, காக்கை - காப்பது, கடன் - அவனுக்குக் கடமையாகும். (எ - று.)

க - து:—நலம் இன்னது இடர் இன்னது என்றுணரும் உணர்ச்சி, ஒருவனுக்கு இருக்குமாயின் அவன் உலகத்துக் குதவி செய்வது கடமையாகும் என்பதாம். உ௯௪

உன்னொரு மனமிறந்தால் உண்டுறங்கல் வேண்டிப்
பின்னொருமனம் உண்டாமோ பேசு.

ப - ரை :—உன் - எல்லாவற்றையும் கருதுகிற, ஒரு - ஒப்பற்ற, மனம் - மனமானது, இறந்தால் - முழுமையும் இறந்து விட்டால், பின் - மறுபடியும், உண்டு - ஆகாரத்தைப் புசித்து, உறங்கல் - நித்திரை செய்தலை, வேண்டி - விரும்பி, ஒருமனம் - வேறு ஒரு மன மானது, உண்டாமோ - உண்டாகுமா? பேசு - நீ சொல்லுக. (எ - று.)

க - து :—மனம் இறந்துவிட்டால், ஆகார நித்திரையை விரும்ப மற்றொரு மனம் உற்பத்தியாகுமா? சொல் என்பதாம். உ௯௫

உன்னுங்கல் தோறும்நடிக்கும் ஒள்வேலாற் போற்றும்
என்னென்புகொன்றுண் ணூர்ப்புகழ்த லே.

ப - ரை:—உன் - வளர்ச்சியை யுடைய, ஓங்கல் தொறும் - மலைகள் தோறும், நடிக்கும் - நடனஞ் செய்யும், ஒள் - ஒளியுடைய, வேலான் - வேலாயுதத்தை யுடைய முருகக் கடவுளை, போற்றும் - வழிபடுகின்ற, என் - எனது, நோன்பு - விரதமானது, கொன்று - உயிர்க்கொலை செய்து, உண்ணூர் - புலாலைப் புசியாதவர்களை, புகழ்தலே - கொண்டாடுதலேயாம். (எ - று.)

க - து :—முருகக் கடவுளின் அடிமையாகிய என்னுடைய விரதம், கொலை புலைகளை நீக்கினவரைப் புகழ்ந்து கொண்டிருப்பதேயாகும் என்பதாம். உசக

இன்னௌவற் கனியெறிந்தாற் கேற்றதமிழ்ப் பாடல்
பன்னௌவைவள்ளு வன்சொற் படி.

ப - ரை —இன் - இனிய, நௌவற்கனி - நாவற்பழத்தை, எறிந்தாற்கு - மரத்தினின்றும் பறித்தெறிந்த முருகக்கடவுளுக்கு, ஏற்ற - தகுந்த, தமிழ்ப்பாடல் - தமிழ்ப்பாடலை பன் - பாடியருளிய, ஔவை - ஔவையார், வள்ளுவன் - திருவள்ளுவ நாயனார் என்னும் இவ் இருவருடைய, சொல் - நூல்களை, படி - வாசித்தறிவாயாக. (எ - று.)

க - து :—ஔவையார், திருவள்ளுவ நாயனர் என்னும் இருவருடைய நூல்களைப் படித்து உண்மைப் பொருள்களைத் தெரிந்துகொள் என்பதாம்.

௱௨௰௭

---

**எல்லா வருக்கமுஞ்சொல் என்குறட்பாக் கைத்திடினும்**
**நல்லார் விரும்புவதே ஞாயமென்னும் நானிலமே.**

ப - ரை:— எல்லா வருக்கமும் - உயிர் வருக்கம் முதலிய வருக்கங்கள் எல்லாவற்றிலும் உள்ள ஒவ்வோரெழுத்தையும், சொல் - தனித் தனி பாக்களின் முதலில் முறையே அமைத்துச் சொல்லப் புகுந்த, என் - என்னல் இயற்றப் பெற்ற இந்நூலுள், குறட்பா - சில குறள் வெண்பாக்களை, கைத்திடினும் - சிலர் வெறுத்தாலும், நானிலம் - உலகமானது, நல்லார் - பொருட்சுவை தெரிந்த நல்லோர்கள், விரும்புவதே மனம் மகிழ்ந்து ஏற்றுக் கொள்ளுவதே, ஞாயம் - வழக்காகும், என்னும் - என்று மொழியிடும். (எ - று.)

க - து :—என்னலியற்றப்பட்ட இந்நூலுள் சில பாக்களில் சில சொற்கள் சுவைகுன்றி இருப்பினும் நல்லோர்கள் பொருள் நயம் பற்றி மனமகிழ்ந்து ஏற்றுக்கொள்வாரென்பதே வழக்கமென்று இவ்வுலகம் சொல்லும். ஆதலால், இந்நூல் யாவராலும் புகழப்பெற்று விளங்கும் என்று துணிந்தேன் என்பதாம்.

தெய்வமே துணை.